ரப்பரைஸ்டு
காயர்
மெத்தைகள்:

இளைப்பாற்றி
மூட்டுவதில் இத
இணையற்றவை.





- பட்டுமென் சுகம்..சொல்லி லடங்காது.
- கட்டுறுதி வாய்ந்தது.
- 'பட்'டென்று தொய்ந்து போகாது...பார்க்கவோ பேரெழிலின் வடிவம்.
- கோடையிலும் குளுமைதரும், காரணம், காற்றுப்புக நுண் துளைகள் உண்டு.
- பஞ்சு மெத்தையை விடக் கொஞ்சமே விலை அதிகம்,

வரவேற்பறை மெத்தைகள், தலையணைகள், பெரிய திண்டுகள் நாற்காலிகள்...., அனைத்திற்கும் 'மெத்'தென்ற மென் சுகம். கம்பளங்களுக்கு, அடியிலும் போடலாம் பாதுகாப்பாக. ஈரம் தாக்காது, எளிதில் சுத்தப் படுத்தி விடலாம். விலையுயர்ந்த மெத்தைகளின் இதமான சுகம்-அவற்றுக்குச் செலவிடும் பாதிப் பணத்திலேயே பெற்று விடலாம்!



இதமான சுகம் பெற

# ரப்பரைஸ்டு காயர்

காயர் போர்டு, கொச்சி-682016

இன்றே காயர் வாங்குங்கள், ஷோரூம்கள்: பம்பாய், புது டில்லி, கல்கத்தா, சென்னை, பெங்களூர், கொச்சி, மதுரை, சந்திகர், புவனேஷ்வர் மற்றும் அனேக வியாபாரிகள்.

# கல்கி




## இந்த இதழில்

ஆனந்த, புரட்டாசி, 27 ★ அக்டோபர் 13, 1974



வண்ணப்படம்: உதயபாஸ்கர்

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 30-00 | ரூ. 15-00 |
| இதர நாடுகள் | ரூ. 60-00 | ரூ. 30-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 44-00 | ரூ. 22-00 |

இ. காங்கிரஸ்
சுயேச்சை
அ.தி.மு.க
பழைய காங்கிரஸ்
மரத்துக்கு மரம்!
மக்கள் எதிர்ப்பு
'மிஸா' சட்டம்
க.:பூர் மந்திரி சபை

# வெள்ளிவிழாச் சாதனைகள்!


கல்கி

மலர் 34

இதழ் 11




தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

சமூக சீர்திருத்த நோக்கில் தொடங்கப்பட்ட கழகம் திரு அண்ணாதுரையின் தலைமையில் வியக்கத் தக்க வளர்ச்சியுற்றுப் பெருவாரியான மக்களின் மனத்தைக் கவர்ந்தது. அரசியலில் இறங்கிச் சட்டசபையில் புகுந்து பிரதான எதிர்க் கட்சியாக விளங்கியது. 1967 தேர்தலில் ராஜாஜி — அண்ணா கூட்டணி காங்கிரஸை முறியடித்துத் தி. மு. க. ஆட்சிக்கு வர உதவியது. இந்த அளவுக்குத் துரித வளர்ச்சியைத் தி. மு. க. தலைவர்களே எதிர்பார்க்கவில்லை!

இப்படி விடுவிடுவென்று மக்கள் மன்றத்தில் உயர்ந்துகொண்டே போன கட்சியின் மதிப்பு அண்ணாவின் மறைவுக்குப் பிறகு திபுதிபுவென்று சரியவும் தொடங்கியது. அண்மையில் நடைபெற்ற வெள்ளி விழாவும் அதையொட்டிய கோலாகல ஊர்வலமும் வண்ண விளக்கு ஜாலங்களும் ஒரு பிரமையை ஏற்படுத்தினாலும் அவை கட்சிக்கு மக்களிடையே உள்ள உண்மையான மதிப்பைப் பிரதிபலிக்கவில்லை. இந்தச் சரிவுக்கு முக்கியமான காரணத்தை ஒரே வரியில் கூறிவிடலாம்: தி. மு. க. இன்னும் அண்ணாவைப் போற்றுகிறது; ஆனால் அவர் கட்டளையான 'கடமை, கண்ணியம், கட்டுப்பாடு' என்ற தாரக மந்திரத்தை அலட்சியப்படுத்தி விட்டது.

தேர்தலில் தி. மு. க. மாபெரும் வெற்றி பெற்றதுமே 'கட்சி ஆசாமிகளை அரசுக் காரியாலயங்களை அண்ட விடாதீர்கள்' என்று ராஜாஜி எச்சரித்தார். தி.மு.க. இதை மதிக்கவில்லை. விளைவு— லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுக்கள் மலிந்துவிட்டன. அவற்றில் பல உண்மை என்று நிரூபணமாகியும்விட்டன.

ஆட்சியிலிருப்பவர்கள் கடமையைச் செய்கிறார்கள். ஆனால் அதில் தீர்க்க தரிசனமும் நிதான சிந்தனையும் இல்லை. உணர்ச்சி வசப்பட்ட காரியங்களாய் உள்ளன. மதுவிலக்கை ரத்து செய்து மீண்டும் அமுலாக்கியது, அரிசி விலையில் அபரிமிதமான திடீர் உயர்வுக்கு இடமளித்தது போன்ற காரியங்கள் மக்களுக்கு மிகுந்த அதிருப்தியை அளித்திருக்கின்றன. கல்லூரியில் தமிழைப் போதனாமொழியாக்கியது, எண்பது சதம் வேலை வாய்ப்பு தமிழருக்கு என நிர்ணயித்தது, மாநில சுயாட்சிக் கூக்குரல் போன்றவற்றிலெல்லாம் யதார்த்த நோக்கைவிட உணர்ச்சி வேகமே மிகுந்துள்ளன.

மக்களின் அடிப்படைத் தேவை எனப்படுவன சுத்தமான ஆட்சி, தொழில் வளர்ச்சி — வேலை வாய்ப்பு, விவசாயப் பெருக்கம்— நியாய விலையில் உணவு ஆகியவையே. இம்மூன்று அம்சங்களிலும் நாம் அடைந்திருப்பது ஏமாற்றமே. காங்கிரஸ் ஆட்சியில் அமைச்சராகப் பணியாற்றிய ஆர். வேங்கடராமன் காலத்தில் தொழில் துறையில் ஏற்பட்ட 'மான் வேக வளர்ச்சி ஆமை வேகமாகிவிடா விட்டாலும் தி. மு. க. ஆட்சியில் ஆட்டு வேகமாகிவிட்டது.

கூவம் சுத்திகரிப்பு,' வள்ளுவர் கோட்டம், கட்டபொம்மன் கோட்டை, பூம்புகார் புனர்நிர்மாணம் போன்றவற்றில் செலவழிக்கப்பட்ட, படுகிற பணத்தை நிரந்தர வேலைவாய்ப்புக்களைத் தரக்கூடிய தொழில் பெருக்கத்துக்குப் பயன்படுத்தியிருக்கலாம் என்ற வாதத்தில் அர்த்தமில்லாமல் போகவில்லை.

கடமைகளைச் சரிவர நிறைவேற்றாத தி.மு.க. பிரமுகர்கள், கட்டுப்பாடு இழந்து பிளவுபடுவதும் கட்சிக்குக் கட்சி தாவுவதும் கண்ணியமிழந்து மேடைக்கு மேடை ஒருவரையொருவர் தூற்றிக் கொள்வதும் அண்ணாவுக்குச் செய்யும் அபசாரங்கள். இவற்றுக்குப் பிராயச்சித்தமாக அவர்கள் அறிஞருக்கு எத்தனை சிலைகள் எடுப்பித்தாலும் போதாது!

நிலையான ஆட்சியை வழங்குகிறார்கள், குற்றச்சாட்டுக்களைச் செவிமடுத்துக் கேட்டுத் தவறுகளைத் திருத்திக்கொள்ளவும் தயாராயிருக்கிறார்கள் என்ற இரட்டைப் பெருமை தி. மு. க. தலைவர்களுக்கு உண்டு.

மற்ற மாநிலங்களைவிடத் தமிழ்நாட்டில் நிலைமை எவ்வளவோ மேல் — சந்தேகமில்லை. ஆனால் இம்மட்டில் திருப்தியுறுவது அற்பத் திருப்தியாகும்.

# பச்சிள மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்—

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம்: பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு — ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

**பிறந்த நன்மையப் மிக்க மென்மையோடு**
**உங்கள் மேனி மிளிரப் பேருதவி**

*Johnson & Johnson**






## வாடேகர் ராஜிநாமா

இந்திய கிரிக்கெட்கோஷ்டி இங்கிலாந்தில் அடைந்த தோல்விக்கும் காப்டன் பதவியிலிருந்து தாம் ஒய்வு பெறுவதற்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை என்கிறார் வாடேகர். தமது ஸ்டேட் பாங்க் உத்தியோகத்தைச் சரிவரக் கவனிக்க முடியவில்லையாம். குடும்பத்தினருடன் உறவாட நேரம் ஒதுக்க முடியவில்லையாம். காரணங்கள் நமக்கு நம்பிக்கை அளிக்கவும் இல்லை; திருப்தி தரவும் இல்லை.



விளையாட்டுக்களில் வெற்றி தோல்வி மாறி மாறித்தான் வரும் என்றாலும் கடைசியாகநடந்த இங்கிலாந்து டெஸ்டில் நமது ஆட்டக்காரர்கள் படுமோசமாக விளையாடியதை வெட்கக்கேடு என்றுதான் வர்ணிக்க வேண்டும். அதோடு மைதானத்துக்கு வெளியே படுமோசமாக நடந்துகொண்டு கெட்ட பெயரை மேலும் கெடுத்தார்கள்.

எனவே, வாடேகர் இங்கிலாந்தில் கிடைத்த இந்த இருவிதத் தோல்விகளுக்காகவும் தாம் தார்மீகப் பொறுப்பேற்றுப் பதவி துறப்பதாகக் கூறியிருந்தால் அவர் மீது நமக்கு மதிப்பு மிகும் என்பது மட்டுமல்ல, எதிர்காலத்தில் நமது விளையாட்டு வீரர்கள் இன்னும் பொறுப்புணர்ச்சியுடன் நடந்து கொள்ளவும் அது அதிர்ச்சி வைத்தியமாக இருந்திருக்கும். நமது கிரிக்கெட் அரசியல், சுயநலம் ஆகியன நீங்கித் தூய்மை பெறவும் உதவியிருக்கும்.

## அசுரனின் உயிர் !

கள்ளக்கடத்தல்காரர் மீது நடத்தும் போரைப் பதுக்கல்காரர் மீதும் விஸ்தரிக்கப் போகிறார் பிரதமர். அபரிமிதமான அதிகாரங்களைத் தனக்குத்தானே வழங்கிக் கொண்டு அரசு சிறைச்சாலைகளை நிரப்புவதால் மட்டும் கள்ளக் கடத்தலும் பதுக்கலும் ஒழிந்து விடாது. அசுரனின் தலைகளைக் கிள்ளி எறிந்தாலும் வேறு தலைகள் அவற்றின் இடத்தில் முளைத்துக் கொண்டேயிருக்கும் என்பதாகப் புராணங்களில் படிக்கிறோமே அப்படிக் கள்ளக்கடத்தல்காரர்களும் பதுக்கல் காரர்களும் கிளைத்துக் கொண்டேதான் இருப்பார்கள். தவிர, சிறைச்சாலையில் இருந்து கொண்டே கள்ளக் கடத்தலை நிர்வகிக்கும் ஆற்றலும் கடத்தல் மன்னர்களுக்கு உண்டு.

எனவே அசுரனின் உயிரைத் தாங்கித் தங்கக் கூண்டில் அடைபட்டு ஏழுமலைகளுக்கு அப்பால் உள்ள குகையில் ஒளிந்திருக்கும் கிளியை நாடிச் செல்ல வேண்டும் !

கள்ளக் கடத்தாலாலும் பதுக்கலாலும் லாபமில்லை என்ற சூழலை இங்கு உருவாக்கினால் அசுரன் தானாகவே மடிந்துவிடுவான். இந்தச் சூழல் ஏற்பட அரசின் சோஷலிஸக் கொள்கை மாற வேண்டும். பர்மிட் லைசென்ஸ் பொருளாதாரம் சுதந்திரப் பொருளாதாரத்துக்கு இடம் விட்டு ஒதுங்க வேண்டும்.

## சுந்தரமான மணி விழா

தமிழக சுதந்திரக் கட்சித் தலைவர் ஜி. கே. சுந்தரம் மணிவிழா காண்கிறார்.

உழைப்பு, அதன் வெற்றிக்கு அடையாளமான ஐசுவரியம், அதன்பயனான ஈகை, இவற்றுடன் எளிமை, வாய்மை, சாந்தம் ஆகிய ஆறு செல்வங்களைப் பெற்றுள்ளவர் ஆறு பத்து ஆண்டுகள் நிரம்பப் பெறுகிறார்.

லக்ஷ்மி மில்ஸ் அதிபரான இவர் தொழில் துறையில் சாதித்துள்ளவை மிகப் பல. அறப்பணிகளில் நிறைவேற்றியுள்ளவையும் ஏராளம்.



பங்குதாரர்களின் பெருமதிப்புக்கு உரியவர். பழகுவதற்கு இனியவர். தோற்றத்தில் மட்டுமின்றி வாழ்க்கையையே எளிமையாக்கிக் கொண்டவர்.

இத்தகைய அருங்குணங்களைப் பெற்ற காந்தியச் செம்மல் சுதந்திரக் கட்சியின் தலைவராக விளங்க வேண்டும் என ராஜாஜி விரும்பியதில் ஆச்சரியமில்லை.

அவர் கட்டளையை ஏற்று திரு ஜி. கே. சுந்தரம் அடக்கமாக ஆக்கப் பணி புரிந்து வருகிறார். ஆட்சியைக் கைப்பற்றுவது முக்கியமல்ல. ஜனநாயகக் கோட்பாடுகளை, சுதந்திரப் பொருளாதாரத்தின் சிறப்புக்களை மக்கள் அறியச் செய்வதே சுதந்திரக் கட்சியின் முதல் பணி என்ற ராஜாஜியின் கருத்துப்படி நடந்து வருகிறார். அது நாளடைவில் நற்பலன் தராமல் போகாது.

ராஜாஜியின் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரமானவர் என்பதற்கு அதிகமாக என்ன கூறி, சுந்தரத்தை நாம் வாழ்த்த முடியும் ?

## ராய.சொ. மறைந்தார்

தமிழ்ப் பேரறிஞரும், தேசபக்தரும், அன்பர்களால் 'ராய. சொ' என்று செல்லமாக அழைக்கப்பட்டு வந்தவருமான ராய. சொக்கலிங்கம் தமது எழுபத்தாறாவது வயதில் காரைக்குடியில் 30–9–74 அன்று காலமானார். அவர் பழந் தமிழ் இலக்கிய நூல்களுக்குத் திறனாய்வு செய்து தமிழ் மொழிக்கு அரிய சேவை செய்திருக்கிறார். 1932ம் ஆண்டு வேயேநாட்டின்விடுதலைப் போரில் ஈடுபட்டுச் சிறை வாசம் செய்தார்.



அவரது இறுதிக் காலம் வரையில், தமிழ் மொழி வளர்ச்சியில் மட்டற்ற ஆர்வம் காட்டி வந்தார். ராய சொ. காரைக்குடி முனிசிபல் கௌன்சிலில் சேர்மன் பதவி வகித்து மக்கள் நல்வாழ்வுக்கான நல்ல பல திட்டங்கள் வகுத்துச் செயல்முறையில் கொணர்ந்தார். தமிழகத்தில் மட்டும் அல்லாமல், தமிழ்கூறும் நல்லுலகம் முழுவதும் அவருக்கு ஏராளமான நண்பர்கள் உண்டு. அவர் ஆன்மா சாந்தியடைய இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

## பீகாரில் வன்முறை

பல தலைவர்கள் கவலைப்பட்டது போலவே பீகார் ஹர்த்தாலின் போது வன்முறைகள் வலுக்கின்றன. நாட்டில் இன்று நிலவும் பொருளாதார நெருக்கடியில் ஹர்த்தாலும் கதவடைப்பும் வேலைநிறுத்தமும் நியாயமாகுமா என்பதை ஜெயப்பிரகாசர் புனராலோசனை செய்வது நலம். சமூகத் துரோகிகளும் தேசத்துரோகிகளும் நிச்சயமற்ற சூழலைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளத் தயாராயிருக்கிறார்கள்.

ஆட்சி மாற வேண்டும் என்பதில் நமது மதிப்புக்குரிய தலைவருக்கும் நமக்கும் இடையில் அபிப்பிராய பேதமில்லை. ஆட்சியில் உள்ள குறைகளை எடுத்துக் கூறி, தேர்தலையொட்டி நல்லாட்சியை அமைப்பது எப்படி என்பதை மக்களுக்கு உணர்த்துவதும் அவர்கள் ஏற்கக்கூடிய நல்ல தலைமையை உருவாக்குவதுமே ஜனநாயகப் பண்பாகும். ஆங்கிலேயரை வெளியேற்றக் கடைப்பிடிக்கப்பட்ட முறைகள் சுதந்திர பாரதத்துக்குப் பொருந்தாதவை.

## திருவாசகமணி

ஆரம்பத்தில் நாத்திகராயிருந்த பால சுப்பிரமணியம், பழுத்த ஆத்திகராக மாறித் தமிழ்க் கலாசாரத்தைப் பரப்பும் பணியில் ஈடுபட்டு, தென் ஆப்பிரிக்கா, மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்திருக்கிறார். அவர் தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும் ஆற்றிய பெருந்தொண்டு திருவாசகத்தையும், திருக்குறளையும் அரியமுறையில் ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்புச் செய்திருப்பதுதான். அந்த அரும்பணியின் காரணமாகவே 'திருவாசகமணி' என்ற சிறப்புப் பெயரைப் பெற்றார். சொல்லாற்றல் படைத்த இவருடைய சமயச் சொற்பொழிவுகளுக்குத் தமிழ்கூறும் நல்லுலகமெங்கும் நல்ல வரவேற்பு உண்டு.



தமது கடைசிக் காலத்தில் பெரிய புராணத்துக்கு ஆங்கில வடிவம் தரும் அரும் பெரும் பணியில் ஈடுபட்டிருந்தார். அந்தப் பணி முற்றுப்பெறுவதற்குமுன் அவர் இயற்கை எய்தியது தமிழகத்தின் துர்ப்பாக்கியமாகும்.

---

ராஜாஜி சிந்தனை

### உனக்குள்ளே இருக்கும் கடவுள்

அர்ஜுனனிடம் கீதாசாரியன் கூறுகிறான் : ''எல்லாருடைய உள்ளத்திலும் கோயில் கொண்டுள்ள ஆண்டவனிடம் நம்பிக்கையுடன் முறையிட்டுக் கொள்.'' தொடர்ந்து சொல்கிறான் : ''என்னிடம் நம்பிக்கை வை. எல்லா இடையூறுகளையும் நீ வெற்றி காண உனக்கு நான் உதவுகிறேன்.''

மனச்சாட்சி என்பது பற்றியும் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வது, வற்புறுத்துவது என்பது பற்றியும் கீதையின் கொள்கை என்ன என்பது இதில் அடங்கியிருக்கிறது.

எல்லாருடைய மனங்களிலும் இருந்து கொண்டு சகல மக்களின் நடவடிக்கைகளையும் அவன் பொம்மலாட்டக்காரன் பொம்மைகளை ஆட்டுவிப்பது போல் கட்டுப்படுத்துகிறான். அவனிடம் மனமுருகி முறையிட்டுக் கொள்.

மனச்சாட்சியின் குரல் என்பது ஆண்டவன் குரலே. தவறான செயலில் இறங்கும்போது மனச்சாட்சி குரல் கொடுக்கும்.

சுயராஜ்யா, ஜனவரி 6, 1962





## போர்ஹென்ஸால் பல் துலக்கவும் அவளுக்குக் கற்பியுங்கள்.

**தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.**

ஈறுகளை உறுதியுடனும் ஆரோக்கியத்துடனும் வைத்திருக்க அவற்றைத் தினமும் தவறாமல் தேய்த்துக்கொடுப்பது சிறந்த வழி என்று பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள். அது போலவே, பற்சிதைவைத் தடுக்கும் சிறந்த வழி, இரவிலும் காலையிலும், ஒவ்வொரு முறை உணவருந்திய பின்னும், தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, பற்சிதைவைத் தோற்றுவிக்கும் உணவுத்துகள்களை அகற்றுவது.




உங்கள் குழந்தைக்கு போர்ஹென்ஸ் பழக்கத்தைக் கற்பியுங்கள். அதாவது, பல் வைத்திய ரொருவரால் உருவாக்கப்பட்ட போர்ஹென்ஸ் பற்பசை கொண்டு, போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் ஜூனியர்டுத் பிரஷ்ஷால் தவறாமல் பல் துலக்கவும் ஈறுகளைத் தேய்த்துக் கொடுக்கவும் பழக்கப்படுத்துங்கள்.

## போர்ஹென்ஸ் பற்பராமரிப்பு பற்றிக் கற்பிக்க இதுவே தக்க வயது.

**போர்ஹென்ஸ்**

பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை

**இலவசம்!** "உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம். இப் புத்தகம்* பெற (தபால் செலவுக்காக) 25 பைசா தபால் தலையுடன் இக் கூப்பனை "மேனர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய்-1" என்னும் முகவரிக்கு அனுப்புக. K-6

பெயர் ______________________ வயது ________

முகவரி ______________________________

*எந்த மொழியில் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, பஞ்சாபி, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

130F-182



# அன்னபூரணி

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

நம் தேசத்தில் மட்டும் என்றில்லை; லோகம் முழுக்க துர்ப்பிக்ஷம் அதிகமாகி வருகிறது. மெஷின்கள் நிறையச் செய்து விடலாம். பாக்டரிகள் நிறைய வைத்து விடலாம். ஆனால் பயிர் பச்சைகள் வளர்வது நம் கையில் இல்லாமல் இருக்கிறது. தானிய ஸம்ருத்தி (செழிப்பு) இருந்தாலொழிய, வயிறு நிரம்பினால் அன்றி, பாக்கி என்ன கபிட்சம் செய்து கொண்டாலும் மொத்தத்தில் துர்ப்பிட்சமாகத்தான் இருக்கிறது. இப்போது லோகத்தில் இந்த நிலைமை தான் இருக்கிறது. பயிர் பச்சை விளைச்சலுக்கு நம்முடைய அகட விகட சாமர்த்தியங்களால் பிரயோஜனமில்லை. என்ஜினியர் அணை கட்டலாம். ஆனால் மழையைப் பெய்விக்க அவரால் முடியாது. ஜகன்மாதாவான அன்னபூரணேசுவரியை எல்லாரும் மனசாரப் பிரார்த்தித்துக் கொண்டால் தான் விமோசனம் உண்டு. அவளே நாம் செய்கிற மகா பாபங்களை க்ஷமித்துத் தானிய ஸம்ருத்தியை அனுக்கிரகிப்பாள். துர்பிட்சம் போக அவளே பிச்சை போடுவாள்.

நம்முடைய ஆசார்யாள், ஸ்ரீ சங்கர பகவத்பாதர் காசியில் இருந்த போது அன்னபூரணேசுவரிமீது ஒரு ஸ்தோத்திரம் பாடியருளினார்.

அதில் சுலோகத்துக்குச் சுலோகம் முடிவிலே, 'கருணையின் பற்றுக் கொம்பாக இருக்கிற அம்மாவே, அன்னபூரணேசுவரியே, எனக்குப் பிச்சை போடு' என்று உருக்கமாக வேண்டுகிறார்.

**பிக்ஷாம் தேஹி க்ருபாவலம்பனகரீ**
**மாதா அன்னபூர்ணேச்வரீ**

'எனக்கு' என்றால் அவருக்கில்லை. அவருக்கு பிக்ஷை ஜாம் ஜாம் என்று நடந்து கொண்டிருக்கும்! தவிரவும் நம் ஆசாரியாளுக்குத் தான் என்கிற எண்ணம் லவலேசம் கூடக் கிடையாது. கிரகசன் என்ற காபாலிகன் அவரிடம், ''ஒரு சக்கரவர்த்தி அல்லது சந்நியாசியின் தலையைப் பலி கொடுத்தால் எனக்குக் கபாலியின் தரிசனம் கிடைக்கும்'' என்றான். உடனே ஆசார்யாள், ''சக்கரவர்த்தியின் தலைக்கு ஆசைப்பட்டால் உன் தலையே போய் விடும். சந்நியாசியின் தலை வேண்டுமானால் இதோ இந்தத் தலையை எடுத்துக் கொள்'' என்று தமது சிரஸையே தொட்டுக் காட்டினார். அப்புறம் ஈசுவர சங்கல்பத்தால் கதை மாறிப் போயிற்று. அது வேறு விஷயம். இப்போது நான் அந்தக் கதையைச் சொல்ல வரவில்லை. ஆசாரியாளுக்குக் கொஞ்சம்கூட அகங்கார, மமகாரமே கிடையாது என்பதற்காக இதைச் சொன்னேன். அப்படிப்பட்டவர் ''எனக்கு பிக்ஷை போடு'' என்றால் என்ன அர்த்தம்?

இந்த ஸ்தோத்திரத்தின் கடைசி சுலோகத்தைப் பார்த்தால் அர்த்தம் புரியும். அதில் 'எனக்குப் பார்வதியே அம்மா; பரமேசுவரனே அப்பா; சிவபக்தர்கள் எல்லாம் பந்துக்கள்; மூவுலகமும் வீடு' என்கிறார். எனவே எனக்குப் பிச்சை போடு என்று இவர் கேட்கிற போது, திரிலோகங்களுக்கும் பிச்சை போடு என்றே அர்த்தமாகிறது.

அதோடு, தனக்கு என்றே வேண்டிக் கொள்கிற நம் மாதிரி இருக்கப்பட்டவர்கள் பாராயணம் செய்வதற்கும் பொருத்தமாக இப்படி ஸ்துதி செய்திருக்கிறார்.

அன்ன பிக்ஷை மட்டும் பிரயோஜனமில்லை. முடிவில் ஞானமில்லாமல் வெறுமே தின்று தின்று ஊனை வளர்த்துப் பிரயோஜனமில்லை. கையில் க்ஷீரான்ன (பால்சோற்று)ப் பாத்திரமும், கரண்டியும் வைத்துக் கொண்டு அன்புருவாக உணவு போடும் அன்னபூரணி இந்த ஞானத்தையும் விசேஷமாக அனுக்கிரகிக்கிறாள். ஞான வைராக்கியப் பிச்சையைத் தான் ஆதிசங்கரரும் முடிவாகக் கேட்கிறார்.

காஞ்சி காமாக்ஷியில் அன்னபூர்ணேசுவரியும் அடக்கம். காமாக்ஷி இரு நாழி நெல் கொண்டு முப்பத்திரண்டு அறங்களை வளர்த்தாள். அதில் அன்னதானம் ஒன்று. காமகோட்டத்தில் அன்னபூரணி சந்நிதி இருக்கிறது. காஞ்சியில் ஓண காந்தன் தளியில் இருக்கும் ஸ்வாமியைப் பாடும் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் 'காமகோட்டத்தில் அன்னபூரணியே இருக்கும் போது நீர் ஏன் பிக்ஷாண்டியாக அலைகிறீர்?' என்று கேட்கிறார்.

**வாரிரும் குழல் வாள்நெடுங்கண்**
**மலைமகள் மதுவிம்மு கொன்றைத்**
**தாரிருந்தட மார்பு நீங்காத் தையலாள்**
**உலகுய்ய வைத்த**
**காரிரும் பொழில் கச்சி மூதூர்க்**
**காமகோட்டம் உண்டாக நீர் போய்**
**ஊரிடும் பிச்சை கொள்வதென்னே**
**ஓண காந்தன் தளியுளீரே!**

சரீரம், ஆத்மா இரண்டுக்கும் உணவூட்டி வளர்க்கிற அன்னபூரணேசுவரியை துதித்து சமஸ்த ஜீவர்களுக்கும் துர்பிட்சம் நீங்கப் பிரார்த்திப்போம்.





▢ நவராத்திரியின்போது அஞ்ஞான உருவான அவுணரைச் சம்ஹரித்து ஞானஒளி புகச் செய்த துர்க்காதேவியேதான் காமாட்சி. நவராத்திரியை யொட்டி வெளிவரும் இந்த இதழில் காமாட்சி சுப்ரபாதத்தின் நயமான பகுதிகளைத் தமிழாக்கித் தருகிறோம். -- ஆ-ர்.

குழந்தை தூங்கும், தாய் விழித்துக் கொண்டே இருப்பாள்; குழந்தையையும் விழிப்புறச் செய்வாள். இதுவே உலக வழக்கம். ஆனால் மூவுலக மாதாவோ குழந்தைகள் அழைக்க, அழைக்க விழிக்காமலே இருக்கிறாளே! 'மதலையர் எழுப்பவும் தாய்துயில் வாளோ' என்று பாரதி பாரத மாதாவான பராசக்தியிடம் கேட்ட இதே கேள்வியைக் கவி லக்ஷ்மிகாந்த சர்மா ஸ்ரீ காஞ்சி காமாக்ஷியிடம் கேட்கிறார்.

பாரதியாரின் திருப்பள்ளி எழுச்சி போலவும், சர்மாவின் காமாக்ஷி ஸுப்ரபாதம் போலவும் ஒரு துதி, தன்னைத் துயிலெழுப்ப வேண்டியே பிறக்கும் எனில், பரம ரஸிகையான அம்பாள் எழுந்திருந்து வரவே மாட்டாள்; பொய்த் தூக்கத்தில் துதி கேட்டுக் கொண்டே தான் இருப்பாள் என்று தோன்றுகிறது!

சம்ஸ்கிருத மொழியில் ஸ்ரீ பாலாஜி வேங்கடரமணனுக்கும், மற்றும் பல தெய்வங்களுக்கும் உள்ள உத்தமமான ஸுப்ரபாதங்களோடு, தமிழில் சிவபெருமான் மீது மாணிக்கவாசகரும், அரங்கநாதன் மீது தொண்டரடிப் பொடியும், பராசக்தி மீது பாரதியும் பாடியுள்ள திருப்பள்ளி எழுச்சிகளோடு வைத்து மதிக்கத் தக்கதாக அமைந்துள்ளது ஸ்ரீ காமாக்ஷி ஸுப்ரபாதம். ஸ்ரீ காஞ்சி ஆசாரியாளின் அநுக்கிரக விசேஷம்!

இதில் நேராகவும், மறைமுகமாகவும் மிளிரும் கவி நயங்களில் சிறிது சுவைக்கலாம்:

அம்பிகையின் வதனத்தை நினைத்துக் கொண்டு தன் மதியத்துக்கு வெட்கம் வந்து அஸ்தமித்து விட்டதாம். தன் பொன்னுரு அவள் முகம் போலிருக்குமோ என்று ஒப்புவமை காண ஆதவன் உதித்து விட்டானும்! இரவு முடிந்து வைகறை விரிவதை இப்படிச் சொல்கிறார் கவி!

ஆனால் சூரியனின் வெம்மையின்றிக் குளிர்ந்திருப்பினும் சந்திரனிலும் ஒளி சிறந்து விளங்குவது அம்மையின் முகம். 'சயனக் கிருகத்தில் தனது மூடிய கண்ணுக்கு மேலாகப் படிந்துள்ள இந்தஒளிப் போர்வை மதியத்தினுடையதேனமகாதேவன்நினைத்து விட்டானு? அதனுல் தான் விழிப்புறாமல் உன் மடியிலேயே படுத்துறங்கிக் கொண்டு, உன்னையும் அந்தப்புரத்திலிருந்து வெளியே வரவொட்டாமல் செய்கிருனு?' எனக் கேட்கிறார் கவி.

'நீ விழித்துக் கொண்டு விட்டாய் என்பதை உன்னே உன் அணிகள் கலகலக்கும் ஜல் ஜல் ஒலி தெரிவிக்கிறது. உன் பதிதான் நீ எங்கள் முன்வந்து எங்களுக்கு நன்ருளை விடிவிக்காமல் செய்கிருர். உண்மையிலோ உங்களுக்குள் ஊடல் தகராறு. எனவே பொழுது விடிந்ததைத் தெரிந்து கொள்ளாதது போல் ஊடலிலும் உன் மடியிலேயே தூங்கிவிட்ட பாவனையில் கிடக்கிருன்! ஆனால் உனக்கா தெரியாது? எனவே இள நகை புரிகிருய்! அவன் புன்னகை செய்த போது திரிபுரம் எரிந்தது. திரிபுர சுந்தரியான நீ புன்முறுவல் செய்கையிலோ அவனுடைய ஊடல் கோபம் சாம்பராகப் பறக்கிறது. அப்புறம் என்ன? நீ நன்ருகவே வாய் விட்டுச் சிரிக்கிருய். நாங்கள் மானஸிகமாகக் காணும் இந்த இள நகையையும், களிச் சிரிப்பையும் ஸ்தூலமாகக் காட்டுவதற்கு வா! மர்மத்தை நாங்கள் புரிந்து கொண்டு விட்டதால் ஐயன் எழுந்திருந்து விட்டான். தான் வெறும் சிருங்கார சேஷ்டைக்காரனாகத் தோன்றக் கூடாது என்பதால் கங்காதரனை அவன் இதோ கங்கையில் ஆசார நியதியுடன் நீராடக் கிளம்பி விட்டான். ஆனாலும், அவனால் போக முடிகிறதா? உன்னை எதிர்பார்த்துக் கொண்டு நிற்கிருன். நீ 'சேஷம்' வைத்துள்ள ஊடலைத் தள்ளிவிட்டு வெளியே வா!

'உன்னை வெறும் சிருங்கார பேடகமாகச் சொன்னால் போதாதா? சொல்லாமலே நீ பரம ஞான மாதா தான். உன் க்ஷீரத்தைப் பருகி ஒரு தமிழ்க் குழந்தை ஞான சம்பந்தன்

# தான இரவும் கான











பாரதத்தின் பல்வேறு முக்கிய நகரங்களிலும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பாடியுள்ள காமாட்சி சுப்ரபாதம் இசைத்தட்டு வெளியீட்டு விழாக்கள் நடைபெற்றதைப் புகைப் படங்களில் காண்கிறீர்கள். 1. காஞ்சியில் ஸ்ரீ வி. ஆர். பட்டாபிராமன் வெளியிட்டார். 2. சென்னையில் ஜஸ்டிஸ் மகராஜன் தலைமையில் ஸ்ரீ ஏ. வி. எம். வெளியிட்ட இசைத்தட்டைப் பெற்றுக் கொண்டவர் ஸ்ரீமதி மதுரம் கோபால கிருஷ்ணா. 3. பெங்களூர் விழா ஸ்ரீ எச். வி. ஆர். ஐயங்கார் தலைமையில் நடைபெற்றது. 4. பம்பாயில் ஸ்ரீ பால்கிவாலாவும் ஸ்ரீ டி. வி. ராமானுஜமும் விழாவைச் சிறப்பித்தனர். 5. கல்கத்தாவில் ஸ்ரீ முகர்ஜி பேசுகிறார். அருகில் அமர்ந்திருப்பவர் ஸ்ரீ ஜி. எல். மேத்தா. 6. புதுடில்லி காமகோடி சேவா ஸமிதி தலைவர் ஸ்ரீ சுப்பிரமணியம் மத்திய அமைச்சர் டாக்டர் கரண்சிங்கிடமிருந்து இசைத்தட்டைப் பெற்றுக்கொண்டார். 7. வாரணாசியில் ஸ்ரீ கௌதம் பேசுகிறார்.



வைகறையம்

என்றே பேர் பெற்று, அற்புதத் தமிழில் ஞானக் கவிகளைக் கொட்டியதே! நீ பாலூட்டிய விசேஷத்தால் இன்னொரு குழந்தையோ தகப்பனுக்கே ஞானோபதேசம் செய்யும் மகிமை எய்தியதே! உன்னை ஸ்துதி பாடுகிறவர், தாளவாத்தியக்காரர், உன் தரிசனத்துக்குக் காத்திருக்கும் லக்ஷ்மி, சரஸ்வதி உள்ளிட்ட தேவியர், தேவர், உன் ஞானக் குழந்தைகள் எல்லோரும் வெளியில் ஸுப்ரபாதக் காட்சிக்கு ஆர்வமுற்று நிற்பதைச் சொல்லியாயிற்று. அப்படியும் நீ எழுந்திருந்து வரக் காணோம். சரி, இதோ யார், பார்? சாக்ஷாத் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் சந்திரசேகர பகவத் குருவாக்கும் நிற்கிறார். ஆதிசங்கரரின் காலம் தொடங்கிக் காமகோடி பீடத்தில் வழிவழி உன்னை ஆராதித்து வரும் வரிசையில் வந்துள்ள அப் பெம்மான் புஷ்பங்களும், பழங்களும் கையுறையாகக் கொண்டு உன்னைக் காண வந்து நிற்கிறார்!'

இந்தப் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தவுடன் கவிக்கு அம்பிகை நிச்சயம் வெளி வந்து விடுவாள் என்ற உறுதி பிறக்கிறது. பாபத்தைப் போக்கி, அமர நிலை நல்கி, இகத்திலும் பரத்திலும் அபயம், வரம் தரும் திரு உருவ தரிசனம் இதோ கிடைத்துவிடும் என்ற நிச்சயம் உண்டாகிறது. கவித்வ சாதுரியங்களும், மாதுரியங்களும் மறைய, 'உன்னையன்றி வேறு கதி இல்லை' என்ற முறையீடே பீறிக் கொண்டு கிளம்புகிறது. மங்கள வைகறையில் ஏன் இதற்குக்கூடப் புலம்ப வேண்டும்? வாரி வழங்க அவளே அறிவாள். 'இதோ அம்பாள் வந்து விட்டாள். இந்த க்ஷணமே துக்கம் பறந்தது; சுகம் மலர்ந்தது' என்று துதியைப் பூர்த்தி செய்கிறார் கவி.

மற்ற ஸுப்ரபாதங்களைப் போல் உனக்கு நல்விடிவு' என்று சொல்லாமல் 'உன்னால் எமக்கு நல்விடிவாகட்டும்' என்றே கூறி வந்துள்ள கவி அந்த விடிவுதந்த நிறைவை நம் நெஞ்சிலும் உண்டாக்கி விடுகிறார்.

# முகம் எரிந்தது; மனம் குளிர்ந்தது!

ரா. வீழிநாதன்

தினமும் பொழுது விடிந்து பூமி தெரிவதற்குள்ளாக அவளை அந்தப் பேட்டையில் காணலாம். 'விசுக், விசுக்'கென்று தலையில் கீரைக் கூடையுடன் அவள் வருவதே தனி அழகு.

அவளுக்கு வயது இருபதுகூட இருக்காது. அவள் கொண்டுவரும் பசுமையான கீரை போலவே, தளிர் மேனி. இளமை இழையோடி என்னென்னவோ அபூர்வ வேலைப்பாட்டைச் செய்திருந்தது. இளவட்டங்களென்ன, முதுவட்டங்களுமே இமையாது எழில் பருகும் என்றால், அவள் அழகை வர்ணிக்க யாரால் ஆகும்? பெயர் வேல்விழி. பெயருக்கேற்ப அவளது வேல் விழிகளும் ஆளைத் தராதரம் கண்டு கொள்ளும் அபார ஆற்றல் படைத்தவை.

வெங்காச்சத்துக்கு வெகு நாட்களாகவே அவள்மீது ஒரு கண். தருணம் வாய்க்கும் பொழுதெல்லாம் அவளைத் தனியாகப் பின்தொடருவான். அவன் பின் கழுத்தைத் தடவிக்கொண்டு தன்னைத் தொடருவதைக் கண்ட அவளது கண்கள் அவன் எண்ணத்தை எடை போட்டு விட்டன. ஆனால் அவன் கண்கள் தான் அவளைப் பற்றித் தப்புக் கணக்குப் போட்டு விட்டன.

அன்று பொறுமை இழந்து, தலையைச் சொறிந்து கொண்டே துணிச்சலாகச் சீண்டி விட்டான்; வாங்கியும் கட்டிக்கொண்டான்.

''சுத்தக் கசமாலங்க! கீரைக்காரின்னு இளப்பமாப் போயிடுச்சோ? வெறுங் கின்னுக் கீரையாயில்லே நெனைக்கிறானுவ!'' என்று அவள் காதுபடக் கூறிக்கொண்டே, கீரை கொடுக்கும் சாக்கில் அவள் ஒருவீட்டில் நுழைந்து விட்டாள்.

''என்னம்மே! இந்த வெங்காச்சத்துக் கிட்டேயா வாலாட்டறே? ஒட்ட நறுக்கி உன்னைக் கண்ணாலம் கட்டிக்கிட்டு கண்ணிலே விரலை விட்டு ஆட்டலேன்னா என் பேரை மாத்திவை!''

தனக்குள் முணு முணுத்துக் கொண்டானே ஒழிய, வேல்விழியின் காதில் விழும்படி குரல் கொடுக்கும் நெஞ்சுரம் அவனுக்கு இல்லை.




வேல்விழி குரல் கொடுத்துவிட்டுக் கூடையை இறக்கி நிமிர்ந்தாள். எதிரே நின்றவனைப் பார்த்தபொழுது அவள் விழிகள் படபடத்தன. பேச்சற்று நின்றவளிடம் அவனுக்குமே பேச்சுக் கொடுக்கத் தோன்றவில்லை. இருவருடைய விழிகளும் என்றோ நடந்த நிகழ்ச்சியை நினைவுப்படமாகக் காணலுற்றன.

ஏறக் குறைய ஒரு மாதம் இருக்கும். பகல் பன்னிரண்டு மணி இருக்கலாம். ஓட்டேரிப் பகுதியில் பஸ்ஸுக்காகக் காத்திருந்தாள் வேல்விழி. வந்த பஸ்ஸில் கூட்டம் அதிகம் இல்லை; அவள் காத்து நின்ற இடத்திலும் அதிகமாக ஆட்கள் கிடையாது.

அவளை இடித்துத் தள்ளிக் கொண்டு ஏறினான் பின்னால் வந்த வெங்காச்சம். கழுத்தைத் திருப்பிய வேல்விழி பார்வையாலேயே அவனைச் சுட்டாள்.

''என்னம்மே முறைக்கிறே? பஸ்ஸுன்னா இப்படித்தான்! ஆம்பிள்ளை வாடையே மேலே வீசக் கூடாதுன்னு நீ நினைச்சா, ஒண்ணு டாக்ஸி பிடிச்சுக்கிட்டுப் போயிருக்கணும்; இல்லே, நடந்து போயிருக்கணும்!'' என்றான் அவன்.

''ஏன் ஐயா! தெரியாமல்தான் நானும் கேட்கிறேன். இப்போ பஸ்ஸிலே கூட்டமா வாய்யா இருக்குது? எதுக்காக ஐயா தள்ளிக்கிட்டு ஏறுறே?''

''ஆமா, நீ பெரிய ரதி! உன் மேலே ஆசைப்பட்டு இடிக்கப்பிட்டேன்! உன்னைப் போல் எத்தனையோ பெண்களைப் பார்த்திருக்கேன். பேசாமப் போவியா?'' — அவன் தன் குணத்தைக் காட்டினான்.

பஸ்ஸில் இருந்தவர்களோ தங்கள் குணத்தைக் காட்டினர், நமக்கு ஏன் வீண் வம்பு என்று! ஆனல் ஒரே ஒருவனுக்குத்தான் ரத்தம் கொதித்தது. அவன்தான் வடிவேலு!

''ஏன் ஐயா, வீண வார்த்தையைக் கொட்டறே? நானும் பார்த்துக்கிட்டுத்தான் இருக்கேன். இந்தப் பொண்ணு என்ன ஐயா தப்பாச் சொல்லிடுச்சு?'' என்று கேட்டான்.

''பெரிசா வக்காலத்து வாங்கிக்கிட்டு வந்துட்டாரு இவரு! பேசாம உன் வேலையைப் பார்த்துக்கிட்டுப் போவியா...?''

''உனக்குக் கூடப் பிறந்த அக்கா—தங்கச்சி கிடையாதா? நாக்கிலே நரம்பில்லாமல் பேசாதே ஐயா!''

''நியாயம் பேச வந்துட்டாரு. நியாயம்! எங்கிட்டே உன் வேலையை வச்சுக்காதே! ஒட்ட நறுக்கிடுவேன் வாலே!''

வெங்காச்சம் வலுச் சண்டைக்கு இழுக்க, வடிவேலுவின் புதுச் சட்டை கிழிந்தது. இருவரையும் இறக்கிவிட்டுப் பஸ் ஓடிவிட்டது.

பஸ்ஸில் உட்கார்ந்திருந்த வேல்விழிக்குப் பெருங் கவலை, முன்பின் தெரியாத ஆள் நமக்காக வீண் சண்டையை விலக்கு வாங்கிக் கொண்டாரே, என்று! அந்த வடிவேலுவை இங்கே எதேச்சையாகக் கண்ட பொழுது !...

''ஏண்டா, வடிவேலு ! இரண்டு கட்டுக் கீரை வாங்கிக்கிட்டு வர்றதுக்கு இத்தனே நேரமா ?'' உள்ளிருந்து குரல் வந்தபொழுது தான் இருவரும் தங்கள் நினைவுக்கு வந்தனர். அவள் இரண்டு கட்டுக் கீரையைக் கொடுத்து விட்டு நகர்ந்தாள். அவன் அதற்கான விலையைக் கொடுக்க மறந்து உள்ளே போனுன் !

வெங்காச்சம் சும்மா இருக்கவில்லை. திட்டம் தீட்டினுன். விளைவு, வேல்விழியின் அண்ணன் பேச்சிமுத்து அவனுக்குப் பல வகைகளில் கடன்பட்டுவிட்டான்; கடமைப்பட்டும் விட்டான். சகவாச தோஷத்தில் அவன் வெங்காச்சத்திடம் விளையாடிய பணத்தைக் கண்டான்; அதைக் கொண்டு அவன் நடத்தும் உல்லாச வாழ்க்கையைக் கண்டான். அவனேடு இணைந்து வாழ்ந்தால் அப்படித் தானும் வாழ முடியும் என்ற ருசியையும் கண்டான்.

இப்படி அவனே அசைக்க முடியாது ஆட்கொண்டபின் ஒரு நாள் வெங்காச்சம் வார்த்தையைவிட்டான்: ''ஏன், பேச்சிமுத்து! உனக்கு ஒரு தங்கை இருக்கிறுளாமே, வேல்விழின்னு! அவளே எனக்குக் கண்ணுலம் கட்டித் தருவியா ?''

பழம் நழுவிப் பாலில் விழுவதாகவே தோன்றியது பேச்சிமுத்துவுக்கு. வேல்விழியை வெங்காச்சத்துக்குக் கட்டிக் கொடுத்து விட்

திராவகம் வீசி, முகம் வெந்த நிலையிலும்

ஆஸ்பத்திரியில் அதிசய திருமணம்: மணமக்கள் ஆனந்தம்



டால் அவனும் நன்ருக இருக்கலாம்; நாமும் வளமாக வாழலாம்' என்று படவே, வெங்காச்சக்குக் கையடித்தே கொடுத்துவிட்டான்.

"அம்மா! நம்ம வெல்விழி பலேஅதிர்ஷ்டக்காரி. அவளுக்குப் பசையான இடத்திலிருந்து பரிசம் போட ஆள் வரேங்கிறுங்க!" என்ருன் பேச்சிமுத்து.

"வரட்டுமே! யாரு அவங்க?" என்று கேட்டாள் தாயார்.

"வெங்காச்சம்னு எனக்கு ஒரு சிநேகிதன். அவன் கண்ணுலம் கட்டிக்கிறேன்னு சொல்ருன்!" என்ருன் பேச்சிமுத்து.

"அண்ணு! நான் ஒண்ணு சொன்ஞல் கோவிச்சுக்க மாட்டியே!"

"என்ன?"

"நீ சொல்ற வெங்காச்சத்தைப் பத்தி எனக்கு நல்லாத் தெரியும். அவன் ஒரு காவாலி. நீ அவஞேடு சேர்ந்து கெட்டுப் போறேங்கிறதும் எனக்குத் தெரியும். நான் சொல்றதைக் கேளு! நமக்கு அவன் சங்காத்தமே வேண்டாம்!" என்ருள் வெல்விழி.

பொங்கிய கோபத்தை அடக்கிக் கொண்டு பேச்சிமுத்து பேசிஞன். காரியம் ஆக வேண்டுமே! "வெங்காச்சம் என்ன இருந்தாலும் பிழைக்கத் தெரிஞ்ச பிள்ளே. உன்னைக் கண்ணுலம் கட்டிக்கிட்டாப் பெட்டிப் பாம்பாக அடங்கிவிடுவான். நானும் அவனுக்குச் சம்மதம் சொல்லிவிட்டேன். சொல்றதைக்கேளு!"

"அண்ணு! தப்பா நினைச்சுக்காதே! சொல்றதைக் கேட்கிற நிலை தாண்டிப் போச்சு!"

"என்ன?"

"ஆத்திரப்படாதே! நான் ஒருத்தருக்கு என் மனத்தைப் பறிகொடுத்திட்டேன்!"

"ஓகோ! அவ்வளவு தூரத்துக்கு வந்திடிச்சா? யாரோ அவரு?"

"என் பேரில் உள்ள 'விழி'யை நீக்கித் தொடக்கத்திலே 'வடி'வைச் சேர்த்தால் அவர் பெயர் வரும்!"

"போடடா, தகடிகேன்னுனும். பேரைக் கூடச் சொல்லக் கூடாத அளவுக்கு உறவு வளர்ந்திடிச்சோ? — சீ! வெட்கமா யில்லே, உனக்கு? வீட்டிலே இத்தனே பெரியவங்க

---

## இழுக்கலாமா?

திருவாங்கூர் மன்னர்களது குலதெய்வம் பத்மநாப ஸ்வாமி. திருவாங்கூர் நாடே பத்மநாபன் தங்களுக்கு அறக் கட்டளையாக அளித்த ஒரு தர்மச் சொத்து என்றுதான் அவர்கள் எண்ணி வந்தார்கள்.

அந்தக் கோயிலில் ஸ்வாமியின் உபயோகத்துக்காகப் பொன்னுலும் வெள்ளியாலுமான பல பாத்திரங்கள் உள்ளன. ஒரு பெரிய தங்க அண்டா மட்டும் இன்றைய விலையில் மூன்று லட்சம் ரூபாய் என்று மதிப்பிடப் படுகிறது.

பல ஆண்டுகளுக்கு முன்னுல் மூலம் திருநாள் என்ற அரசர் மன்னரா யிருக்கையில் கோவில் சிப்பந்தி ஒருவன் ஸ்வாமி சந்நிதியில் பாத்திரங்களைத் தூக்கி வைக்காமல் தரதரவென்று இழுப்பதைக் கண்டார். உடனே அவனைத் தனியாகக் கூப்பிட்டு, "உன் கைவிரலில் அணிந்துகொண்டிருக்கிறயே மோதிரம், அதை இங்கே கொண்டா" என்று கேட்டு வாங்கி "பத்மநாப ஸ்வாமி சன்னிதியில் தொண்டு செய்வதற்காக நான் கொடுக்கும் சம்பளத்தில் வாங்கிய மோதிரம்தானே இது?" என்று வினவிஞர். சிப்பந்தி "ஆம்" என்ருன்.

உடனே அரசர் அம்மோதிரத்தைத் தரையில் நான்கு தரம் தேய்த்து "இப்போது எப்படி இருக்கிறது?" என்று கேட்டவண்ணம் திருப்பிக் கொடுத்தார். அன்றிலிருந்து அவன் பாத்திரங்களைத் தரதரவென்று இழுக்கும் பழக்கத்தை விட்டொழித்தான்.

-ஏ. வி. ரங்கராஜன்.

## வோட்டுப் பெறும் சிரமம் வேட்பாளருக்குத் தெரியும்!

அமெரிக்காவில் முன்டுெரு நாள் ஓர் உதவி ஜனாதிபதி மீண்டும் தேர்தலுக்கு நின்ருர். அப்பொழுது அவருக்கு எதிராக வாக்களிக்கப் போவதாக ஒருவர் கூறிஞர்.

"உங்களுடைய பெண்ணுக்குக் கல்லூரியில் படிக்க இடம் பெற்றுத் தரவில்லையா நான்?"

"ஆமாம்!"

"உங்கள் பையனுக்கு வேலை வாங்கித் தரவில்லையா?"

"உண்மைதான்!"

"உங்களுக்கும் பெரிய உத்தியோகம் பெற்றுத் தரவில்லையா?"

"மறுக்க வில்லை!"

"அப்படி யிருந்தும் எனக்குச் சாதகமாக நீங்கள் ஏன் இருக்க விரும்பவில்லை?"

"நீங்கள் சமீபகாலமாக எந்த விதமான ஒத்தாசையும் எனக்குச் செய்யவில்லையே!" -பி என் எம்.

### பொன்மொழிகள்

மனிதன் ஒருவனைத் தவிர மற்ற மிருகங்களுக்கு வாழ்க்கையின் முக்கிய குறிக்கோள் சந்தோஷமாக இருப்பதுதான். -சாமுவேல் பட்லர்

கடுமையான வேலை மூன்று பெரிய கொடுமைகளை -- 'போர்' என்ற வார்த்தை, தீய பழக்கங்கள், ஏழைமை ஆகிய மூன்றையும்--அடித்து விரட்டுகிறது.

-- வால்டேர்





1. தி. மு. கழகம் சென்னையில் அலங்கார விளக்குகள் போட்டு, மாபெரும் ஊர்வலம் நடத்தி இருபத்தைந்தாவது ஆண்டு நிறைவை முப்பெரும் விழாவாகக் கொண்டாடியது.

2. காந்தி மண்டபத்தில் இந்த வருஷம் காந்தி ஜயந்தியைப் பெரு விழாவாகக் கொண்டாடத் தமிழக ஆளுனர் திரு ஷா ஏற்பாடு செய்திருந்தார். கர்நாடக, பாண்டிச்சேரி ஆளுனர்களும், மத்திய சர்க்கார் மந்திரி உமா சங்கர் தீக்ஷித்தும், தமிழக முதல்வரும், மந்திரிகளும் மற்றும் பல பிரமுகர்களும் கலந்து கொண்ட இந்த வைபவத்தில் பல கருத்தரங்குகளும் இடம் பெற்றன. காந்திஜியின் காரியதரிசி பியாரேலால் சிறப்பு விருந்தினராக விழாவில் கலந்து கொண்டார். இதுவரை திறந்தவெளி அரங்கமாக இருந்த காந்தி மண்டபத்துக்குக் கூரை போடும் பணி முற்றுப் பெற்று, இதன் திறப்பு விழாவும் நடந்தது. ஜோதி ஊர்வலம் மரீனாவிலிருந்து காந்தி மண்டபத்துக்குச் சென்றது. காந்தி மண்டபத்தில் தமிழக முதல்வர் ஜோதியைப் பெற்றுக் கொள்கிறார். அருகே தமிழக ஆளுனரும் உள்ளார்.

---

இருக்கிறபோது, காதல் பண்ணப் போயிட்டியோ, காதல்!''

எரிந்து விழுந்த பேச்சிமுத்து, ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. நான் சொல்ற நேரத்திலே, சொல்ற இடத்திலே நீ கழுத்தை நீட்டணும், தாலியைக் கட்டிக்கணும். அவ்வளவுதான் எனக்குத் தெரியும் !'' என்று முத்தாய்ப்பு வைத்தாற்போல முடித்தான்.

பேச்சிமுத்துவின் பேச்சுக்குப் பயந்து காதல் தன் உறவை முறித்துக் கொள்ளவில்லை. அது நேரம் — பொழுது கிடைத்த போதெல்லாம் வளர்ந்தது. அதைக் கண்டு அரண்டவன் வெங்காச்சம்தான் !

''மயிலே, மயிலேன்னா இறகு போடாது, பேச்சிமுத்து ! உன் தங்கச்சியை அடக்கி வைக்கணும் ; வடிவேலுவை மிரட்டி வைக்கணும் !'' என்று முடுக்கிவிட்டான். அதற்கு அச்சாரமாக அவனிடம் ஒரு சோவையும் கொடுத்து வைத்தான்.

அன்று முதற் காட்சி சினிமாப் பார்த்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்த வடிவேலுவையும் வேல்விழியையும் பார்த்த பொழுது பேச்சிமுத்துவுக்குப் பற்றிக்கொண்டு வந்தது. ''இதோ பாரு, வடிவேலு! என் தங்கச்சியை மறந்து நல்ல பிள்ளையாயிரு. அவளை நான் வெங்காச்சத்துக்குக் கட்டிக் கொடுக்கிறதாத் தீர்மானிச்சுட்டேன். எவனாவது குறுக்கிட்டா எனக்குக் கெட்ட கோபம் வந்துவிடும் !'' என்றான்.

''அண்ணே ! இரண்டு கைகொட்டினால் தான் சத்தம் வரும்பாங்க. அதுபோல இரண்டு பேர் மனமும் ஒத்துப் போனால்தான் மண வாழ்க்கை மணம் பெறும் !'' பேசியது வேல்விழி. ஆனால் பேச்சிமுத்துவுக்கு ஆத்திரம் வந்தது வடிவேலுவின் பேரில்தான்.

''இவரு பெரிய பாடம் உருவேத்தி வச்சிருக்காராக்கும் !'' என்று வடிவேலுவைப் பிடித்துத் தள்ளினான்.

'' உன் தங்கச்சிக்கு இஷ்டம்னா அவனுக்கே அவளைக் கொடேன், ஐயா ! என்னிடம் எதற்கு வீண் வம்புக்கு வர்றே ?'' வடிவேலு விலகித்தான் போனான், துஷ்டர்களைக் கண்டால் தூர விலகு என்ற பழமொழியைக் கடைப்பிடித்து.

'' உன் முகரக்கட்டையைப் பார்த்துத் தான் ஐயா, அவ கெட்டுப் போனா ! அதை எப்படி ஆக்கி வைக்கிறேன், பார்!'' என்று விருப்புப் பேசி வீசிவிட்டான் பேச்சிமுத்து. வெங்காச்சம் கொடுத்த சோவை !

''ஐயோ !''

அக்கினித் திராவகம் பட்ட எரிச்சலில் அலறிவிட்டான் வடிவேலு ! அவன் முகம் போன போக்கைப் பார்க்க முடியவில்லை. அப்படியே தரையில் விழுந்து புழுவெனத் துடித்தான்.

'' என்ன காரியம் செய்துவிட்டாய், அண்ணா !'' என்று துடித்தாள் வேல்விழி. அவளைக் கரகரவென்று இழுத்துக் கொண்டு அங்கிருந்து ஓடிவிடத் திட்டமிட்டான் பேச்சிமுத்து. ஆனால் அப்பொழுது அந்தப் பக்கம் வந்த பீட் கான்ஸ்டபிள் அவனைப் பிடித்துக் கொண்டான். அதோடு டாக்ஸியைத் தருவித்து வடிவேலுவை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றான்.

அக்கினித் திராவகத்தின் எரிச்சலில் வடிவேலுவின் உடல் என்ன பாடுபட்டதோ ? அதைக் காட்டிலும் அவன் உள்ளம் அனலில் இட்ட புழுவாகத் துடித்தது. வடிவேலு என்ற பெயர் தனக்கு இனி பொருந்தாது என்பதை உணர்ந்தான். ''வேல்விழி! என்னை மறந்துவிடு !'' என்று முணுமுணுத்தான்.

''அத்தான் ! உங்களை இந்த ஜன்மத்தில் என்ன, ஏழேழு ஜன்மத்திலும் மறக்க முடியாது! மறக்கவும் மாட்டேன். காதல் வெறும் கிள்ளுக் கீரை இல்லை. நினைத்தபொழுது உள்ளத்தில் பயிர் செய்து, வேண்டியபோது கிள்ளி விற்பதற்கு ! உங்கள் உள்ளம்தான் எனக்கு வேண்டும் !'' என்று பந்தம் கொண்டாடி அங்கேயே அவன் கரம் பற்றினாள் வேல்விழி. வடிவேலு அந்த எரிச்சலிலும் ஒரு குளிர்ச்சியைக் கண்டான். ''உன் அண்ணன் அந்த வெங்காச்சத்தின் பேச்சைக் கேட்டுக் கெட்டான். அவனை நீ மன்னிச்சிடு!'' என்றான்.

## டெட் .சலவைக் கட்டி

சோப்பைவிட 1½ மடங்கு அதிக சக்தி வாய்ந்தது எளிதில் நுரைவிடாத நீரிலும்!

## டெட் சலவைப் பவுடர்

பலவித பேக் சைஸ்களில் கிடைக்கிறது. துணிகளை ஊறவைத்து அலசுவதே நீங்கள் செய்யவேண்டியது. கைகளையும் மிருதுவாக வைக்கிறது.

## என்-டெட்

கறை நீக்கும் என்சயம் அடங்கியது சக்தி வாய்ந்தது, ஆனால் கெடுதல் செய்யாதது.










**கண்டதுமில்லை,காணப் போவதுமில்லை-இத்தகைய வெண்மை-பெறவே டெட்டின் தரமான தயாரிப்புகள்!**

Shilpi HPMA 6A/74 Tam

# சிவகாமியின் சபதம்

பதினாறாம் அத்தியாயம்

## புலிகேசியின் புறப்பாடு

அமரர் கல்கி

மறுநாள் காஞ்சி நகரில் மீண்டும் ஒரு பெரிய கொண்டாட்டம். அன்று வாதாபிச் சக்கரவர்த்தி புலிகேசி காஞ்சியிலிருந்து புறப்படுவதாக ஏற்பாடாகியிருந்தது.

புறப்படுவதற்கு முன்னால் இன்னொரு தடவை காஞ்சி மாநகரை நன்றாய்ப் பார்க்க வேண்டும் என்று புலிகேசி விரும்பினார்.

எனவே, இரு சக்கரவர்த்திகளும் பட்டத்து யானைமீது அமர்ந்து நகர் வலம் கிளம்பினார்கள். இந்த வைபவத்தை முன்னிட்டுக் காஞ்சி நகரம் அன்று மிகச் சிறப்பாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. நகர மாந்தர்கள் — ஸ்திரீகளும் — புருஷர்களும் — அழகிய ஆடை ஆபரணங்கள் பூண்டு தெரு ஓரங்களில் கும்பலாக நின்று கொண்டிருந்தார்கள். ஆங்காங்கே பலவகை வாத்தியங்கள் முழங்கிக் கொண்டிருந்தன. உப்பரிகை மேன் மாடங்களிலிருந்து இரு சக்கரவர்த்திகளும் அமர்ந்து சென்ற பட்டத்து யானையின் மீது மலர் மாரி பொழிந்து கொண்டிருந்தது.

காஞ்சி மாநகரின் அழகிய விசாலமான வீதிகளையும், மாட மாளிகைகளையும், கோயில்களையும் கோபுரங்களையும், சிற்ப சித்திர மண்டபங்களையும் நடன அரங்கங்களையும், புத்த விஹாரங்களையும், சமணர் ஆலயங்களையும் எவ்வளவுதான் பார்த்தாலும் புலிகேசிக்கு அலுப்பு ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

''பாரவியை மகா கவி என்று நினைத்துக்கொண்டிருந்தேன். அவர் எவ்வளவு மட்டமான கவி என்பது இப்போது தான் தெரிகிறது...'' என்றார் வாதாபி சக்கரவர்த்தி திடீரென்று.

''அதென்ன அப்படிச் சொல்கிறீர்கள்? பாரவியின் 'கிராதார்ஜுனீயம்' எவ்வளவு அழகான காவியம்! தாங்கள் படித்திருக்கிறீர்கள் அல்லவா?'' என்றார் மகேந்திர பல்லவர்.

''ஆ! இந்தக் கவிகள் மலையையும் காட்டையும், மழையையும் மேகத்தையும் வர்ணிக்கச் சொன்னால் வர்ணிப்பார்கள். இந்த மாதிரி ஒரு நகரத்தை வர்ணிக்கச் சொன்னால் அப்போது அவர்களுடைய சாமர்த்தியமெல்லாம் எங்கோ போய் விடுகிறது! பாரவி இந்த நகரத்தைப் பற்றி எனக்கு எழுதிய வர்ணனையெல்லாம் இதன் உண்மைச் சிறப்பில் கால் பங்குகூட வராது. பல்லவேந்திரா! நான் ஒன்று சொல்கிறேன், கேட்கிறீர்களா? நாம் இருவரும் ஒரு பரிவர்த்தனை செய்து கொள்வோம். நர்மதையிலிருந்து துங்கபத்திரை வரை பரந்து கிடக்கும் என்னுடைய சாம்ராஜ்யம் முழுவதையும் எடுத்துக் கொண்டு அதற்கு மாறாக இந்தக் காஞ்சி நகரை மட்டும் எனக்



குக் கொடுங்கள்'' என்றார் வாதாபி அரசர்.

''மன்னர் மன்னா! திவ்வியமாக இந்தக் காஞ்சி நகரை எடுத்துக் கொள்ளுங்கள். அதற்கு மாறாக உங்கள் ராஜ்யம் முழுவதையும் எனக்குக் கொடுக்க வேண்டாம். அஜந்தா மலையையும் அதன் குகைகளையும் மட்டும் கொடுத்தால் போதும்! கல்லினாலும் கண்ணாம்பினாலும் மண்ணினாலும் மரத்தினாலும் கட்டிய இந்த மாநகரின் கட்டிடங்கள் எல்லாம் ஒரு காலத்தில் இடிந்து, தகர்ந்து போனாலும் போகலாம். அஜந்தா மலைக் குகைகளில் எழுதிய அழியா வர்ணச் சித்திரங்கள் நீடூழி காலம் இருக்கும். சளுக்க குல சிரேஷ்டரே! தங்களுக்கு ஒரு சமாசாரம் தெரியுமா? நேற்று நடனமாடினாளே, சிவகாமி! 'வாதாபிக்குப் போகிறாயா?' என்று கேட்டதும் அவள் அவ்வளவு மனத்தாங்கலுடன் பேசினாள் அல்லவா? நீங்கள் மட்டும் அவள் தந்தை ஆயனரிடம் அஜந்தாவைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல வேண்டியதுதான்; உங்களுடன் வந்தால் அஜந்தா வர்ண இரகசியத்தைத் தெரியப்படுத்துவதாகச் சொல்ல வேண்டியதுதான். உடனே உங்களுடன் புறப்பட்டு வர ஆயத்தமாகி விடுவார்!''

''அப்படியா? ஆயனச் சிற்பிக்கு அஜந்தா வர்ண விஷயத்தில் அவ்வளவு அக்கறையா?'' என்று புலிகேசி கேட்டபோது ஏதோ பழைய நினைவு வந்தவரைப் போல் அவருடைய கண்களில் சிந்தனைக் குறி தோன்றியது.

''ஆமாம்! ஆமாம்! அஜந்தா வர்ண இரகசியத்தைத் தெரிந்து கொண்டு வருவதற்காக ஆயனர் தூதுகூட அனுப்பினாரே, அது உங்களுக்கு ஞாபகம் இல்லையா?'' என்றார் பல்லவ சக்கரவர்த்தி. பின்னர் தொடர்ந்து, ''ஆகா! அந்த ஓலையைப் படிக்கக் கேட்டபோது நீங்கள் எப்படித் திகைத்தீர்கள்!'' என்று கூறிவிட்டுக் கலகலவென்று நகைத்தார். விதி, விதி என்று சொல்கிறார்களே, அந்த விதியானது



இப்போது மகேந்திர வர்மரின் நாவில் வந்து உட்கார்ந்து கொண்டது. அது காரணமாக மகா மேதாவியும், தீர்க்க திருஷ்டி உள்ளவரும், சாணக்கிய சாகஸத்தில் இணையற்றவருமான அந்தப் பல்லவ சிரேஷ்டர் நாவின் அடக்கத்தை இழந்தார்.

யாகாவாராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு

என்னும் பொய்யாமொழிப் புலவரின் வாக்கை நன்கு அறிந்தவராயினும் அச்சமயம் அதை மறந்து விட்டார். அவருடைய இதய அந்தரங்கத்துக்குள்ளே கிடந்த இரகசியங்கள் ஒவ்வொன்றாய் வெளிவரலாயின.

மகேந்திர பல்லவரின் கடைசி வார்த்தைகள் புலிகேசியின் உடம்பில் ஏககாலத்தில் பல தேள்கள் கொட்டியது போன்ற உணர்ச்சியை உண்டாக்கியதாகத் தோன்றியது. "சத்ருமல்லா! எதைப் பற்றிச் சொல்கிறீர்கள்? உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டுவிட்டு, பாம்பு சீறுவதைப்போல் பெருமூச்சு விட்டார் புலிகேசி.

மகேந்திர பல்லவர் மறுபடியும் நகைத்து, "ஆமாம், அந்தக்காட்சியை நினைத்தால் எனக்கு இன்னமும் சிரிப்புச் சிரிப்பாய் வருகிறது. வடபெண்ணை நதியை நீங்கள் நெருங்கி விட்டீர்கள். முதலில் ஒரு தூதன் ஓலையைக் கொண்டு வந்து கொடுக்கிறான். அதிலே நீங்கள் எதிர்பாராதவிதமாய் ஏதோ எழுதியிருக்கிறது. உங்களுக்குக் கோபம் கோபமாய் வருகிறது. அந்தச் சமயத்தில் ஓர் இளம் பிள்ளையைச் சிறைப்படுத்திக் கொண்டு வருகிறார்கள். அவனிடமும் ஓர் ஓலை இருக்கிறது. அதைப் படித்தால் பூனை வேளையில் கரடியை விடுவது போல், அஜந்தா வர்ண இரகசியத்தைப் பற்றிக் கேட்டிருக்கிறது. அப்போது உங்களுடைய முகத்தைப் பார்க்க வேண்டுமே? — அதிர்ஷ்டவசத்தினால் அந்தப் பிள்ளையாண்டானை உடனே சிரச்சேதம்



பண்ணைச் சொல்லாமல் நாகார்ஜுனை மலைக்கு அனுப்பச் செய்தீர்கள்!'' என்றார்.

''விசித்திர சித்தரே! இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது? கிட்ட இருந்து பார்த்ததுபோல் சொல்கிறீர்களே?'' என்று பல்லைக் கடித்துக் கொண்டு கேட்டார் புலிகேசி.

''கிட்ட இருந்து பார்த்ததனால்தான் தெரிந்தது!'' என்றார் மகேந்திர சக்கரவர்த்தி.

புலிகேசி மகேந்திரரின் முகத்தை உற்றுப் பார்த்து விட்டு, ''ஆ! அப்படியானால் அந்த வஜ்ரபாகு என்கிற தூதன் தாங்கள்தானாகும்!'' என்றார்.

''அடியேன்தான்!'' என்றார் மகேந்திர பல்லவர்.



''என் மனத்தைக் குழப்பிக்கொண்டிருந்த பல மர்மங்களில் ஒன்று வெளியாகி விட்டது. மீதமுள்ள மர்மங்களைக் கண்டுபிடிப்பதில் இனிமேல் கஷ்டமே இராது'' என்று புலிகேசி மெல்லிய குரலில் தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

பிறகு, உரத்த குரலில், ''அப்படியானால் வஜ்ரபாஹு கொண்டு வந்த அந்த ஓலை?...'' என்று கேட்டார்.

''தூதனையே சிருஷ்டி செய்தவனுக்கு ஓலையைச் சிருஷ்டி செய்வதுதானா பெரிய காரியம்?''

''இல்லை, இல்லை! காஞ்சி மகேந்திர பல்லவருக்கு எதுவுமே பெரிய காரியம் இல்லை! ஐயா! இப்போதாவது எனக்குச் சொல்லலாமல்லவா? எது நிஜ ஓலை? எது பொய் ஓலை?''

''சத்யாச்ரயா! அந்தப் பிள்ளை முதலில் கொண்டுவந்த நிஜமான ஓலைமட்டும் உங்களிடம் அப்போது வந்திருந்தால் — இன்றைக்கு நீங்களும் நானும் இந்தக் காஞ்சி நகர வீதிகளில் பட்டத்து யானையின் மீது அமர்ந்து ஊர்வலம் வந்து கொண்டிருக்க மாட்டோம். ஊர்வலம் வருவதற்கு வீதியே இராது; காஞ்சி நகரமும் இராது. வைஜயந்தி அடைந்த கதியைக் காஞ்சியும் அடைந்திருக்கும். நண்பரே! இப்போது நீங்களும் உண்மையைச் சொல்லுங்கள். இந்த அழகான நகரை அடியோடு அழித்துவிடும் எண்ணம் அப்போது உங்கள் உள்ளத்தில் இருக்கவில்லையா?'' என்று மகேந்திரர் கேட்டார்.

புலிகேசி தம் மனத்துக்குள், ''அப்போது அவ்வளவாக இல்லை; இப்போதுதான் இந்த நகரை எரித்துப் பொசுக்கிச் சாம்பராக்கிவிட வேண்டுமென்று தோன்றுகிறது'' என்று எண்ணிக்கொண்டார். வெளிப்படையாக, ''பல்லவேந்திரா! முதல் ஓலையில்—நிஜ ஓலையில் — என்ன எழுதியிருந்தது?'' என்று கேட்டார்.

''வேறொன்றுமில்லை. பாகப் பிரிவினைதான் செய்திருந்தது. 'பல்லவ சாம்ராஜ்யத்தையும் காஞ்சி சுந்தரியையும் நீ எடுத்துக்கொள். நடன கலாராணி சிவகாமியை மட்டும் எனக்குக் கொடுத்துவிடு' என்று பிக்ஷு உங்களைக் கேட்டிருந்தார்!''

இதைக் கேட்ட வாதாபிச் சக்கரவர்த்தி சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்து விட்டு, ''காஞ்சி சுந்தரியைக் கைப்பற்றுவது அவ்வளவு சுலபமான காரியமா?'' என்றார்.

''நண்பரே! அந்த ஓலையில் எழுதியிருந்தபடி நீங்கள் நேரே காஞ்சிக்கு வந்திருந்தால் அது சுலபமாகத்தான் இருந்திருக்கும். அப்போது இந்தக் காஞ்சிக் கோட்டை வாசலின் கதவுகள் உங்கள் யானைப் படையில் ஒரு யானையின் மோதலுக்குக் கூட ஈடு கொடுத்து நின்றிருக்க முடியாது!'' என்றார் மகேந்திர பல்லவர்.

புலிகேசியின் உள்ளத்தில் பல தீ மலைகள் ஏககாலத்தில் நெருப்பைக் கக்க ஆரம்பித்தன. மகேந்திரரை ஏறிட்டு நோக்கி, ''பல்லவேந்திரா! அர்த்த சாஸ்திரத்தை எழுதிய கௌடில்யர் உங்களிடம் பிச்சை வாங்க வேண்டும்!'' என்றார்.

''எங்கள் தென்னாட்டிலும் ஒரு பிரபல இராஜதந்திரி உண்டு. அவர் பெயர் திருவள்ளுவர். அந்தப் பெரியார் எழுதிய பொருளதிகார நூலை உங்களுக்குப் பரிசளிக்க வேண்டும் என்று எனக்கு விருப்பம். ஆனால், எங்கள் செந்தமிழ் மொழியை இன்னும் நீங்கள் நன்றாய்ப்



"ட்ரூ-டோன்"
சமமாகவும்
சீராகவும் பரவும்"
திருமதி வின்னி சங்க்
ப்ரூ ஹெவன், கல்கத்தா.

"ட்ரூ-டோன்" பாதுகாப்
பானது. எளிதாக
உபயோகிக்கலாம்"
ஜென்னி லீ
ஸில்ஹூ-வெட் ப்யூட்டி சலூன், ஓபராய்
இண்டர்காண்டினென்டல், புது தில்லி.

"ட்ரூ-டோன்" வழங்கும்
பளபளப்பான இயற்கை
வண்ணம் பார்க்க
பிரமிப்பூட்டுவது"
பிகரெட் ஹேர் டிரெஸ்ஸிங் அண்ட்
பியூட்டி பார்லர் சென்னை

"ட்ரூ-டோன்" உங்கள்
கேசத்திற்கு அதன் இயற்
கையான வண்ணத்தை
வழங்குகிறது"
மாண்டி
ஸில்ஹூ-வெட் ப்யூட்டி
ஸலூன், ஓபராய்
ஷெரடன், பம்பாய்-1.




பெரிய
மற்றும்
நடுத்தரமான
பாக்குகளில்
கிடைக்கிறது

ARMS-HC-036-140 TAM

முன்னணியில் நிற்கும் கேச அலங்கரிப்பாளர்கள் ஒருமித்து
சிபாரிசு செய்வது

# ஹெலென் கர்ட்டிஸ்

# ட்ரூ-டோன்

## ஹேர் டை

**ஹெலென் கர்ட்டிஸ்** ஆண்களுக்கும்
பெண்களுக்குமென,
உலகிலேயே மிகப் பெருமளவு விற்பனையாகும் கூந்தல் சாயம்.

ட்ரூ-டோன் கறை நீக்கியும் கிடைக்கிறது.

தரமாக தயாரித்து வழங்குவோர்: ஜே.கே. ஹெலென் கர்ட்டிஸ் லிட்., பம்பாய்-1

தென்னிந்தியாவுக்குப் பூரண விநியோகஸ்தர்கள்:

**மெஸர்ஸ் பாரி & கோ., லிமிடெட்**

பயிலவில்லையே?'' என்றார் சத்துரு மல்லர்.

பிறகு, ''நண்பரே! போனதெல்லாம் போயிற்று. அதையெல்லாம் பூர்வ ஜன்ம அநுபவமாக நினைத்து மறந்து விடுங்கள். இந்தப் பத்துத் தினங்களில் நீங்களும் நானும் அத்தியந்த சிநேகிதர்களாகி விட்டோம். உங்களை நான் அறிந்து கொண்டேன். என்னையும் நீங்கள் அறிந்து கொண்டீர்கள். உங்களுடைய படையெடுப்பைத் தடுப்பதற்கு நான் கையாண்ட தந்திரங்களை யெல்லாம் என் மனத்துக்குள் வைத்திருப்பது சிநேகத் துரோகம் என்றுதான் அவற்றை உங்களுக்குச் சொன்னேன். இனிமேல் நமது நேசத்துக்கு எவ்விதத் தடங்கலும் இல்லை. நம்மிருவருடைய ஆயுளும் உள்ளவரையில் நாம் இனிமேல் சிநேகிதர்கள். என் ஆயுட்காலத்தில் தங்களுக்கு விரோதமாக இனி நான் ஒன்றும் செய்ய மாட்டேன். தாங்களும் அப்படித்தானே?'' என்று மகேந்திர பல்லவர் உண்மையான உள்ள நெகிழ்ச்சியுடன் கேட்டார்.

''சத்ருமல்லா! அதைப் பற்றிக் கேட்க வேண்டுமா?'' என்றார் வாதாபிச் சக்கரவர்த்தி.

* * *

நகர் வலம் எல்லாம் முடிந்து பட்டத்து யானை காஞ்சியின் வடக்குக் கோட்டை வாசல் அண்டை வந்து நின்றது. இரு சக்கரவர்த்திகளும் பிரிய வேண்டிய சமயம் வந்தது.

யானையின் மீதிருந்தவர்கள் பூமியில் இறங்கினார்கள். ஒருவரை யொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டார்கள்.

''பல்லவேந்திரா! உங்கள் நகருக்கு விருந்தினராக வந்ததில் எனக்கு எவ்வளவோ சந்தோஷம். அபூர்வமான காட்சிகளைக் கண்டேன். அபூர்வமான விஷயங்களைக் கேட்டேன். ஆனால், தங்கள் வீரப் புதல்வன் மாமல்லனைப் பார்க்காமல் திரும்பிப் போவதிலேதான் கொஞ்சம் வருத்தம்!'' என்றார் புலிகேசி.

''ஆம்! மாமல்லனையும் பார்க்கவில்லை; உங்களுக்கு முதலில் ஓலைகொண்டுவந்த வாலிபனையும் நீங்கள் பார்க்கவில்லை; நாகநந்தி பல்லவ ராஜ்யத்துக்குப் பெரியதோர் உபகாரம் செய்தார். சிறந்த வீரத் தளபதி ஒருவனை அளித்தார்!''

புலிகேசி குறுக்கிட்டு, ''ஆமாம்! தளபதி பரஞ்சோதியைப் பாராததிலும் எனக்கு ஏமாற்றம்தான். அவர்கள் இருவரும் எங்கே என்பதை இன்னும் தாங்கள் சொல்லவில்லையே?'' என்றார்.

''பாண்டிய மன்னனை வழியனுப்ப அவர்கள் போயிருக்கிறார்கள். இன்றைக்குக் காலையிலேதான் செய்தி வந்தது. பாண்டியனைக் கொள்ளைச் சோழ நாட்டின் எல்லை வரையில் கொண்டு போய் விட்டு விட்டார்களாம்!''

''ஆகா! நினைத்தேன். ஏதோ பாண்டியனுக்கு நீங்கள் சம்பந்தியாகப் போவதாக ஒரு வதந்தி இருந்ததே!''

''சம்பந்தி உபசாரம் செய்வதற்குத்தான் மாமல்லனும் பரஞ்சோதியும் போனார்கள்!'' என்று கூறி மகேந்திர பல்லவர் நகைத்தார்.

''விசித்திர சித்தரே! போய் வருகிறேன். போவதற்கு முன்னால் கடைசியாக ஒரு வார்த்தை கேட்கிறேன். நாக



நந்தி பிக்ஷு யார் என்பது உங்களுக்குத் தெரியுமா?'' என்று புலிகேசி கேட்க, மகேந்திர பல்லவர், ''உத்தேசமாகத் தெரியும்!'' என்று கூறி, வாதாபிச் சக்கரவர்த்தியின் காதோடு ஏதோ கூறினார்.

''ஆ! உங்களுக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை. அப்படித் தெரிந்திருக்கும்போது, அவரை நீங்கள் விடுதலை செய்து என்னுடன் அனுப்பப் போவதில்லையா?'' என்று புலிகேசி ஆங்கார மான குரலில் கேட்டார்.

''சக்கரவர்த்தி கோரினால் அவ்விதமே செய்யத் தடையில்லை!'' என்றார் மகேந்திர பல்லவர்.

''வாதாபி சளுக்க குலத்தார் யாரிடமும் எந்தக் கோரிக்கையும் செய்து கொள்வதில்லை!'' என்று புலிகேசி கம்பீரமாய்க் கூறினார்.

"காஞ்சிப் பல்லவ குலத்தினர் யாருக்கும் கோராத வரத்தைக் கொடுப்பதில்லை" என்றார் மகேந்திர வர்மர்.
"பல்லவேந்திரா! போய் வருகிறேன்!" என்றார் புலிகேசி.
"சத்யாச்ரயா! ஞாபகம் இருக்கட்டும்!" என்றார் மகேந்திர பல்லவர்.
"ஒரு நாளும் மறக்க மாட்டேன்" என்றார் வாதாபி மன்னர்.

## பதினேழாம் அத்தியாயம்
# சின்னக் கண்ணன்

ஏறக்குறைய ஒன்றரை ஆண்டு காலம் பிரிந்திருந்த பிறகு, சிவகாமியும் கமலியும் சந்தித்த போது, அந்த இளம் பிராயத் தோழிகளுக்கு ஏற்பட்ட உள்ளக் கிளர்ச்சியை விவரிக்க முடியாது.

ஒருவரையொருவர் தழுவிக் கொண்டார்கள்; ஒருவருடைய தலையை ஒருவர் தோளில் வைத்துக் கொண்டு கண்ணீர் விட்டார்கள்! விம்மி அழுதார்கள்; இடீரென்று சிரித்தார்கள்; ஒருவரையொருவர் வாழ்த்திக் கொண்டார்கள்; உடனே வைது கொண்டார்கள்.

இருவரும் ஏக காலத்தில் பேச முயன்றார்கள்; பிறகு இருவரும் சேர்ந்தாற்போல் மௌனமாயிருந்தார்கள்.

அந்த ஒன்றரை வருஷத்துக்குள் இருவருடைய வாழ்க்கையிலும் எத்தனை எத்தனையோ முக்கிய சம்பவங்கள் நிகழ்ந்திருந்தன. அவற்றுள் எதை முதலில் சொல்வது, எதை அப்புறம் சொல்வது என்று நிர்ணயிக்க முடியாமல் தவித்தார்கள். அந்தப் பிரச்னையை அவர்களுக்காகச் சின்னக் கண்ணன் தீர்த்து வைத்தான்.

தொட்டிலில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த குழந்தை தான் விழித்துக் கொண்டு விட்டதை ஒரு கூச்சல் மூலம் தெரியப்படுத்தியதும், கமலி ஓடிப் போய்க் குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டு வந்தாள்.

சிவகாமி சின்னக் கண்ணனைக் கண்டதும் சற்று நேரம் திகைத்துப் போய், பார்த்தது பார்த்தபடி நின்றாள். வெளிப்படையில் அவள் ஸ்தம்பித்து நின்றாளே தவிர, அவளுடைய உடம்பின் ஒவ்வோர் அணுவும் அப்போது துடித்தது. அவளுடைய இதய அந்தரங்கத்தின் ஆழத்திலிருந்து இது வரை அவளுக்கே தெரியாமல் மறைந்து கிடந்த ஏதோ ஓர் உணர்ச்சி பொங்கி வந்து மளமளவென்று பெருகி அவளையே முழுவதும் மூழ்கடித்து விட்டது போல் இருந்தது.

"ஏனடி இவ்விதம் ஜடமாக நிற்கிறாய்? சின்னக் கண்ணன் உன்னை என்ன செய்தான்? இவன் பேரில் உனக்கு என்ன கோபம்?" என்று கமலி கேட்டதும், சிவகாமி இந்தப் பூவுலகுக்கு வந்தாள்.
"கமலி! இவன் யாரடி? எங்கிருந்து வந்தான்? எப்போது வந்தான்? — என்னிடம் வருவானா?" என்று சிவகாமி குழறிக் குழறிப் பேசிக் கொண்டே இரண்டு கைகளையும் நீட்ட, குழந்தையும் சிவகாமியின் முகத்தைத் தன் அகன்ற கண்கள் இன்னும் அகலமாக விரியும்படி பார்த்துக் கொண்டே, அவளிடம் போவதற்காகக் கைகளையும் கால்களையும் ஆட்டிக் கொண்டு பிரயத்தனப்பட்டது.
"உன்னிடம் வருவானா என்று கேட்கிறாய்? அதற்குள் என்னவோ மாயப் பொடி போட்டுவிட்டாயே, கள்ளி! — மாமல்லருக்குப் போட்ட மாயப் பொடியில் கொஞ்சம் மிச்சம் இல்லாமல் போகுமா?" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே கமலி குழந்தையைச் சிவகாமியிடம் கொடுத்தாள்.

மாமல்லரைப் பற்றிக் குறிப்பிட்டது சிவகாமிக்குக் குதூகலத்தையும் நாணத்தையும் ஒருங்கே அளித்தது. அவள் குழந்தையைக் கையில் வாங்கி மூக்கும் விழியும் கன்னமும் கதுப்புமாயிருந்த அதன் முகத்தைப் பார்த்துக் கொண்டே, "ஆமாண்டி, அம்மா! ஆமாம்! நீ கண்ணனுக்குப் போட்ட மாயப் பொடியில் கொஞ்சம் மீந்துக் கொடுத்ததைத்தானே நான் மாமல்லருக்குப் போட்டேன்? — பார்! அப்படியே அப்பாவின் முகத்தை உரித்து வைத்தது போல் இருக்கிறது! கமலி! இவன் அப்பா எங்கே?" என்று கேட்க, கமலி, "இது என்ன கேள்வி? மாமல்லர் எங்கே இருக்கிறாரோ, அங்கேதான் இவன் அப்பா இருப்பார்!" என்றாள்.
"ஓஹோ! அப்படியானால் அண்ணனும் இன்று அரண்மனையில்தான் இருந்தாரா? சபையில் என்னுடைய நாட்டியத்தைப் பார்த்திருப்பார் அல்லவா? நீ ஏனடி வரவில்லை?" என்று சிவகாமி கேட்டதும் கமலி, "என்னடி தங்கச்சி, உளறுகிறாய்? உன் அண்ணனாவது நாட்டியம் பார்க்கவாவது? உனக்குத் தெரியாதா, என்ன? மாமல்லர்தான் தெற்கே பாண்டியனோடு சண்டை போடுவதற்குப் போயிருக்கிறாரே?" என்றாள்.
இதைக் கேட்டதும் சிவகாமிக்கு ஏற்பட்ட அதிர்ச்சியில், தன் மடியில் இருந்த குழந்தையைக்கூட மறந்து

# வாய்த்த மனைவி 'அவருக்கு' ஒரு கால்கட்டா?



ஒரு வேலைக்காரியைக் கட்டி வாழ வேண்டுமென்று அவருக்கென்ன ஆயுள் தண்டனையா? மலர்ந்த முகம் காட்டும் மனைவி அவருக்குத் தேவை.

நானும் என்னாலானதைப் பார்த்துவிட்டேன், பொழுது மிஞ்சினால் தானே! அவர் வீடு திரும்பி வெகு நேரம் ஆன பிறகும் கூட, சமையலறையை விட முடிவதே இல்லை. அப்படி மாளாத வேலை.

திடீரென்று ஒரு நாள் நினைவுக்கு வந்தது— அம்மா வைத்துவிட்டுப் போயிருந்த ஒரு 'மிஷின்'! எடுத்துப் பார்த்தேன்: க்ளியர்டோன் பிரஷர் குக்கர். உபயோகித்ததும் அசந்தே போனேன்!

இத்தனை நாளாக க்ளியர்டோன் இல்லாமல் என்னமாகக் காலம் தள்ளினோம் என்று மலைப்பாக இருந்தது. க்ளியர்டோன்மீது பாரத்தைப் போட்டுவிட்டு, டாண் டாண் என்று வேலை முடிவதைப் பார்க்கும்போது ஆறுதலாக இருக்கிறது. இன்றோ, நாங்கள் இருவரும் பிரிந்திருக்கும் நேரம் சொற்பம் தான். அன்புப் பிடியிலே ஆட்சி நடக்கிறது.

**மணிமணியான க்ளியர்டோன் சாதனங்கள் மனம்போல் ஓய்வுதரும் 'மகிழ்ச்சியோடு உமக்கு.**




தி நேஷனல் ரேடியோ & எலக்ட்ரானிக்ஸ் கோ. லிட்.
பம்பாய் . கல்கத்தா . டெல்லி . சென்னை . இந்தோர்
செகந்த . ராபாத் . பெங்களூர் . கான்பூர்.

விட்டு எழுந்தாள். குழந்தை தரையில் 'பொத்' என்று விழுந்து, 'வீர்' என்று கத்திற்று. கமலி அலறும் குரலில், "அடி பாவி! ஏனடி குழந்தையைக் கீழே போட்டாய்? நீ நாசமற்றுப் போக. உன்னைப் புலிகேசி கொண்டு போக" என்றெல்லாம் திட்டிக் கொண்டே, சின்னக் கண்ணனை எடுத்து மார்போடு அணைத்து இப்படியும் அப்படியும் ஆட்டிக் கொண்டே, "வேண்டாமடா, கண்ணே! வேண்டாமடா" என்று சமாதானப்படுத்தினாள். குழந்தை மீண்டும் மீண்டும் வீரிட்டு அழுதவண்ணம் இருக்கவே, கமலி கோபங்கொண்டு, "அடே, வாயை மூடுகிறாயா? அல்லது புலிகேசியை வந்து உன்னைப் பிடித்துக் கொண்டு போகச் சொல்லட்டுமா?" என்றாள். குழந்தை அதிகமாக அழுதால் இந்த மாதிரி புலிகேசியின் பெயரைச் சொல்லிப் பயமுறுத்துவது வழக்கமாயிருந்தது. அதனால்தான் சிவகாமியையும் மேற்கண்டவாறு சபித்தாள்.

குழந்தை ஒருவாறு அழுகையை நிறுத்தியதும் அதைக் கீழே விட்டு விட்டுக் கமலி சிவகாமியைப் பார்த்தாள். அவளுடைய திகைப்பைக் கவனித்துவிட்டு, "தங்கச்சி! மாமல்லர் பாண்டியனோடு யுத்தம் செய்யப் போயிருப்பது உனக்குத் தெரியாதா, என்ன?" என்று கேட்டாள்.

"தெரியாது, அக்கா!" என்று உணர்ச்சி பொருந்திய கம்மிய குரலில் கூறினாள். தான் சபையில் நடனம் ஆடியபோது, மாமல்லர் எங்கேயோ மறைவான இடத்திலிருந்து பார்த்துக் கொண்டிருப்பார் என்று எண்ணியதை நினைத்து ஏமாற்றம் அடைந்தாள்.

ஆம்! கமலி சொல்வது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். மாமல்லர் மட்டும் இங்கு இருந்திருந்தால் அந்தக் காட்டுப் பூனையின் முன்னால் தன்னை ஆட்டம் ஆடச் சொல்லிப் பார்த்துக் கொண்டிருப்பாரா?

மாமல்லர் இல்லாத சமயத்தில் புலிகேசியின் முன்னால் தான் ஆடியதை நினைத்தபோது சிவகாமிக்கு இப்போது அசாத்திய வெட்கமாயிருந்தது. மகேந்திர பல்லவர் மீது கோபம் கோபமாய் வந்தது. மாமல்லர் இல்லாத போது அவர் இல்லை என்கிற தைரியத்தினாலேயே சக்கரவர்த்தி தன்னைப் புலிகேசியின் முன்னால் ஆடச் சொல்லி அவமானப்படுத்தியிருக்கிறார்.

இத்தகைய குழப்பமான எண்ணங்கள் சிவகாமியின் உள்ளமாகிற ஆகாசத்தில் குமுறி எழுந்தன. திடீரென்று மின்னலைப் போல் ஓர் எண்ணம் தோன்றிக் குழப்பமாகிற கரிய இருளைப் போக்கியது. அந்த மின்னல் ஒளியிலே அவள் கண்டு தெரிந்துகொண்ட விஷயம், தன்னைக் கெடுப்பதற்கு மகேந்திர பல்லவர் செய்த சூழ்ச்சி எவ்வளவு பயங்கரமானது என்பதுதான். அதாவது, மாமல்லர் தெற்கே போகும் போது தன்னை மண்டபப் பட்டில் சந்திக்காதிருக்கும் பொருட்டே, தன்னை இங்கே சக்கரவர்த்தி வரவழைத்திருக்கிறார் என்று அவள் முடிவு செய்தாள்.

சிவகாமியின் முகத் தோற்றத்தையும், அவளுடைய கண்களில் ஜொலித்த கோபக் கனலையும் கவனித்த கமலி சிறிது நேரம் தானும் வாயடைத்துப்



போய் நின்றாள். அப்புறம் சமாளித்துக் கொண்டு, "தங்கச்சி! இது என்ன கோபம்? ஒன்றும் முழுகிப் போய் விடவில்லையே! மாமல்லருக்கு யுத்தம் புதிதா? பாண்டியனை முறியடித்து விட்டு வெற்றி வீரராகத் திரும்பி வரப் போகிறார்! அது வரையில்..." என்று கமலி சொல்லி வந்தபோது, "ஆ போதும் போதும்! வாதாபிப் புலிகேசியை ஜயித்து வாகை மாலை சூடியாகிவிட்டது! — பாண்டியனை ஜயிப்பது தான் மிச்சம்! போடி, அக்கா, போ! இந்தப் பல்லவ குலத்தார்களைப் போல் மானம் கெட்டவர்களை நான் கண்டது மில்லை; கேட்டதுமில்லை" என்றாள் சிவகாமி.

கமலிக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'இது என்ன இவள் இப்படிப் பேச

கிறாள்? சூரியனிடம் காதல் கொள்ளத் துணிந்த பனித் துளிக்கு ஒப்பிட்டுத் தன்னைத் தானே எத்தனையோ தடவை நொந்து கொண்ட சிவகாமிதானா இவள்? குமார பல்லவரின் கடைக்கண் நோக்கத்துக்காகத் தன் உயிரையே கொடுக்கச் சித்தமாயிருந்த சிவகாமி தானா இவள்?''

இப்படிக் கமலி எண்ணி வியந்து கொண்டிருக்கும் போதே, சிவகாமியினுடைய முக பாவம் மாறியது. கமலியின் கழுத்தைக் கட்டிக் கொண்டு, ''அக்கா! ஏதோ பிதற்றுகிறேன். மன்னித்து விடு. எல்லாம் விவரமாகச் சொல்லு. மாமல்லர் எப்போது யுத்தத்துக்குப் போனார்? வாதாபிச் சக்கரவர்த்தி காஞ்சிக்கு வருவதற்கு முன்னாலா? அப்புறமா? அவருடன் அண்ணனைத் தவிர இன்னும் யார் யார் போயிருக்கிறார்கள்? எல்லாம் விவரமாகச் சொல்லு. போகும்போது அண்ணன் உன்னிடம் என்ன சொல்லி விட்டுப் போனார்? என்னை இங்கே சக்கரவர்த்தி நாட்டியம் ஆட வரவழைக்கப் போவது அவர்களுக்குத் தெரியுமா? சொல்லு அக்கா! ஏன் மௌனமாயிருக்கிறாய்? என் பேரில் உனக்குக் கோபமா?'' என்று கேள்விகளை மேலும் மேலும் அடுக்கிக் கொண்டே போனாள்.

அதன் பேரில் கமலியும் தனக்குத் தெரிந்த வரையில் கூறினாள். சிவகாமி நாட்டியம் ஆடுவதற்காக வரப் போகும் செய்தி யுத்தத்துக்குப் போனவர்களுக்குத் தெரிந்திருக்கவே நியாயமில்லை என்றும், தனக்கே இன்றுதான் தெரியும் என்றும் சொன்னாள். எல்லாவற்றையும் கேட்டுவிட்டுச் சிவகாமி, ''அக்கா! நீ ஒன்றும் தப்பாக நினைத்துக் கொள்ளாதே! உன்னை நான் பார்த்து எத்தனையோ நாளாயிற்று. உன்னோடு பேசுவதற்கு எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன. உன் குழந்தை இந்தக் கண்மணியோடு எத்தனை யுகம் கொஞ்சினாலும் எனக்கு ஆசை தீராது. ஆனாலும், நான் இப்போது இங்கே இருப்பதற்கில்லை. மண்டபப்பட்டுக்கு உடனே புறப்பட்டுப் போக வேண்டும். அப்பாவிடம் இதோ சொல்லப் போகிறேன்!'' என்றாள். (தொடரும்)

# படித்துப் பாருங்கள்

## வாரியார் தரும் பெண்குலப் பெருமை

புராணப் பிரசங்கம் புரியும் வாரியார் தற்காலச் சிறுகதை எழுத்தாளர்கள் பாராட்டும் வண்ணம் நல்ல பல உத்திகளோடு கதைகள் புனைந்து அளித்திருக்கிறார்!

வியத்தகு புலமையும், நயத்தகு நாவன்மையும் கொண்டு நாடும், ஏடும் போற்றும் நல்லதொரு தெய்விகப் பணி புரியும் வாரியார் அவர்கள் எழுதிய இந்நூலில், பெண்ணின் பெருமையையும், அதனால் உயர்ந்த நம் தமிழ் மண்ணின் பெருமையையும் சுவையான கதை வடிவத்தில் காண முடிகிறது.

ஓர் ஆண் திருந்தினால் அவன் மட்டும் உய்வான்; ஒரு பெண் திருந்தினால் அவள் குடும்பமே உய்யும் என்ற உயர்ந்த கருத்தை விளக்கும் சிறந்த சிறுகதைத் தொகுதி இந்நூல். ஓவியர் வினுவின் வண்ண ஓவியம் இந்நூலுக்குக் கவர்ச்சியை அளிக்கிறது.

பிரசுரம்: வானதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை—17; விலை: ரூ. 6.00.

## வண்ண வண்ண மீன்கள்

(குழந்தைப் பாடல்கள்)

பெரியவர்களுக்கு எதையும் சொல்லிவிடலாம். ஆனால் குழந்தைகளுக்குச் சொல்லுவதென்பது மிகவும் சிரம சாத்தியமான காரியம். அதில் வார்த்தைகள் எளிதில் அமைய வேண்டும்; ஓசை நயமும் வேண்டும்; சொல்ல வந்ததைத் தெளிவாகச் சொல்லவும் வேண்டும். இந்நூலில் அடங்கியிருக்கும் கவிதைகள் இவ்விலக்கணத்துக்கு ஏற்ற வண்ணம் மிளிர்கின்றன. கற்பனை வளமும் சிறப்பா யிருக்கிறது.

ஆசிரியர்: மின்னூர் சீனிவாசன், விற்பனை உரிமை: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை—1; விலை: ரூ. 2.50.

## அன்பு கூடும்

டாக்டர் பிரபு, அவனது மனைவி டிலோ—மேல் நாட்டுப் பெண்; பிரபுவின் தங்கை மது, அவளது உள்ளம் கவர்ந்த ரகு — சிறந்த எழுத்தாளன்; இவர்கள்தாம் முக்கிய கதா பாத்திரங்கள். இந்தப் பாத்திரங்களை வைத்துக்கொண்டு நாவலைப் பின்னியிருக்கிறார் ஆசிரியை குமிளி ராஜேசுவரி. ஓர் அயல் நாட்டுப் பெண்ணின் மனம் எப்படி இந்திய மண்ணை, இந்தியப் பண்பாட்டை மனமுவந்து ஏற்றுக் கொண்டது என்பதை மிகவும் அழகாக எடுத்துக் கூறியிருக்கிறார்.

கதையின் முடிவு சோகமாயிருந்தாலும், ஏற்ற முடிவுதான் என்பதை யாவரும் ஒப்புக் கொள்ளுவர். சீர்திருத்தத்தைச் செயலில் காட்ட விரும்புகிறவர்கள் வெளிப்படையாகச் சொல்லி அதற்கு விளம்பரம் தேடிக் கொள்ள மாட்டார்கள் என்பதுதான் நாவலின் உள்ளார்ந்த கருத்து. இந்நூலாசிரியை குமிளி ராஜேசுவரி தெளிந்த நீரோடை போன்ற தமிழ்நடையில் கதையைச் சுவையாக எழுதியிருக்கிறார்.

பிரசுரம்: தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், 6, சின்ன ரெட்டித் தெரு, எழும்பூர், சென்னை—8; விலை: ரூ. 4.50.

# இப்போது பம்பாயிலிருந்து யூ.கே. மற்றும் ஐரோப்பாவுக்கு எஸ்ஐஏ 747B ஸர்விஸ்

இப்போது, சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் உமக்கென்றே துவக்கி வைக்கும் ஸர்விஸ்:
பம்பாயிலிருந்து ரோம், ஃப்ராங்க்ஃபர்ட் மற்றும் லண்டன் சென்றிட போயிங் 747B
அல்லது 707 ஸூப்பர் ஜெட். வியாழன் தோறும் செல்கிறது எமது 747B,
திங்கள் தோறும் 707 ஸூப்பர் ஜெட். சிங்கப்பூருக்கு செவ்வாய் மற்றும் சனி தோறும்
707 ஸூப்பர் ஜெட். ஆஸ்திரேலியாவுக்கான எஸ்ஐஏ தொடர்புகள் அதே தினம்
கிடைக்கும். ஹாங்காங், தெய்பெய், ஒஸாகா, மற்றும் டோக்கியோ
நகரங்களுக்கான தொடர்புகள் மறுநாள் கிடைக்கும். விமானப் பயண
முழுதும் உங்களை மகிழ்விக்கும் விசேஷமான பணிவிடை இதர
ஏர்லைன்களையும் அதிசயிக்க வைப்பது. இன்றே பாருங்கள்
பிரயாண ஏஜெண்டை, அல்லது எஸ்ஐஏ.

சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் 

வான வீதியிலே உமக்கோர் சிங்காதனம்

எஸ்ஐஏ, நரிமன் பாயிண்ட், பம்பாய்-400 021. போன்: 259951. டெலெக்ஸ்: 011—3887.
எஸ்ஐஏ, 86D, மவுண்ட் ரோடு, சென்னை-600 002. போன்: 811789, 83917, 83849. டெலெக்ஸ்: MS 7278.

174 BR TM

# ஆசிய விளையாட்டு அதிசயங்கள்



"தில்லியில் டெஹ்ரானுக்குப் புறப்படும் 168 இந்திய விளையாட்டு வீரர்களுக்கும், ஆட்ட நிர்வாகிகளுக்கும் வழியனுப்பு உபசாரத்தில் பாரதப் பிரதமர் இந்திரா காந்தி கூறினார்: 'நீங்கள் டெஹ்ரானுக்கு விளையாட்டுப் பந்தயங்களில் போட்டியிட மட்டும் செல்லவில்லை. அவர்களோடு பழகி, நண்பர்களாக்கிக் கொண்டு வாருங்கள்!' இந்திய விளையாட்டுக்காரர்களுக்காக ஏர் இந்தியா தனியாக அனுப்பிய விமானத்தில் நாங்கள் டெஹ்ரானுக்கு நான்கு மணி நேரத்தில் ஆவலோடு பறந்து சென்றோம். மலைப் பிரதேசம் சூழ்ந்த ஆர்யமெஹர் ஸ்டேடியங்களைச் சுற்றி இரும்புக் கம்பி வலைகளுக்குப் பின்னால் பலத்த ராணுவப் பாதுகாப்போடு அமர்ந்திருந்து போட்டிகளைக் கண்டு திரும்பினோம். மியூனிக் ஒலிம்பிக்கில் கறை படிந்த நிகழ்ச்சி இப்படி ஒருவருக்கொருவர் நெருங்கிப் பழக முடியாதபடி 'மறைந்திருந்து பார்க்கும் மர்ம'த்தைத் தந்தது! எங்களைவிட இஸ்ரேலியர்கள் தங்கிய இடங்கள் கனத்த இரும்பு வேலிக்குள் தனித்துப் பலத்த பாதுகாப்போடு இருந்தன. அரேபியர்களுக்கு உள்ள 'ஸ்போர்ட்ஸ்மன் ஸ்பிரிட்' விநோதம். அவர்கள் இஸ்ரேலியர்களைக் கண்டால் முகம் சுளித்தார்கள். ஆனால் அவர்களது நாட்டிலிருந்து வந்த முட்டைகளை வெளுத்து வாங்கினார்கள்!''

இப்படிச் சுவாரஸ்யமாக டெஹ்ரான் ஆசிய விளையாட்டுப் போட்டிகளை நேரடியாகக் கண்டுவிட்டுத் திரும்பிய இந்திய வாலிபால் பெடரேஷன் உதவித் தலைவரும் இந்திய கோஷ்டியின் வாலிபால் குழு மானேஜருமான ஹாஜி சங்க் சயத் அப்துல் காதர் விவரித்தார்!

''டெஹ்ரான் ஆசிய விளையாட்டுப் போட்டியில் உங்கள் மனத்தைக் கவர்ந்த நிகழ்ச்சி எது?''

''முதல் நாள் ஆசிய விளையாட்டு ஜோதி ஏற்றிய பிறகு உயரமான காலரியில் அமர்ந்து இரானியர்கள் வண்ண அட்டைகளைத் தாங்கி, ஒவ்வொரு தேசிய கீதம் பாடும்போதும் அந்நாட்டின் பெயரையும், அவர்களது கொடியையும் வரச் செய்து திகைக்க வைத்தார்கள். அவர்கள் அந்த வண்ண அட்டைகளுடன் எழுந்து அசைத்தது கொடியே அசைவது போன்ற பிரமையை ஏற்படுத்தியது!''

''ஜப்பானியக் கோஷ்டி நிறையப் பதக்கங்களைத் தட்டிக் கொண்டு, இந்தியா குறைந்த பதக்கங்களுடன் திரும்பியுள்ளதே. இந்தியாவின் தோல்வி திறமைக் குறைவினாலா ஏற்பட்டது?''

''நம் இந்திய விளையாட்டு வீரர்கள் திறமைக் குறைவானவர்கள் என்று ஒப்புக்கொள்ள மாட்டேன். அவர்கள் சர்வதேசப் போட்டிகளில் வெற்றிபெறத் தங்கள் திறமையைக் காட்ட முயன்றார்கள். இந்திய ஆட்டக்காரர்கள் வேறுபட்ட சூழ்நிலையில் மாறுபட்ட மைதானங்களில் ஆட வேண்டிய நிர்ப்பந்தம்! அவர்களுக்கு அந்தச் சூழ்நிலையில் புதியவிதமான மைதானங்களில் ஆடிப் பழக்கமில்லை. உதாரணமாக அவுட்டோரில் மணல் தரையிலே நம் வாலிபால் ஆட்டக்காரர்கள் ஆடிப் பழக்கப்பட்டவர்கள். டெஹ்ரானில் இண்டோர் ஸ்டேடியத்தில் குளிர்பதனம் செய்யப்பட்ட இடத்தில் ஆட வேண்டியிருந்தது. அவர்களும் இந்த ஸ்டேடியத்தில் ஆடிப் பழகி இருந்தால் சோபிப்பார்கள். 'டார்ட்டன்' தரை,



1. புதுதில்லியில் கல்வி மந்திரி அளித்த உபசார விருந்தில் டெஹ்ரானுக்குச் சென்ற வாலிபால் கோஷ்டியினரும் அதிகாரிகளும்.
2. வாலிபால் கோஷ்டி மானேஜர் ஹாஜி கே. எம். சைத் அப்துல் காதர்.
3. டெஹ்ரானில் ஆசிய விளையாட்டுப் போட்டியில் வாலிபால் கோஷ்டி.



ரப்பர் பந்து வேறு! இப்படிப் புதிய முயற்சிகளுக்கு இந்திய ஆட்டக்காரர்கள் பழக்கப்படுவதற்குள் போட்டிகள் முடிந்து விடுகின்றனவே!''

''ஜப்பான் நாடு மட்டும் எப்படி இந்தப் போட்டிகளில் சோபிக்க முடிகிறது?''

''ஜப்பானில் அரசும் மக்களும் ஒவ்வொரு விளையாட்டுப் போட்டியிலும் அதிக கவனம் செலுத்துகிறார்கள். அந்தந்த நாட்டுச் சூழ்நிலைகள், ஆட்ட மைதானங்களைப் பற்றி முன்கூட்டி அறிந்து, அதற்கேற்ப நீண்ட காலம் பயிற்சி பெறச் செய்கிறார்கள். உதாரணமாக அடுத்து ஆசியப் போட்டிகள் பாகிஸ்தானில் நடக்கவிருக்கின்றன. அதற்கு இப்பொழுதிலிருந்தே ஆட்டக்காரர்களைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சி கொடுக்க ஆரம்பித்து விடுவார்கள். பாகிஸ்தான் ஜப்பானிய தூதுவராலயத்தில், விளையாட்டு விவரங்கள் அறிந்த அதிகாரிகளை இப்பொழுது பிடித்தே அனுப்பி வைத்து ஆட்டச் சூழ்நிலைகளை விரிவாகத் தெரிந்து வைத்துக் கொள்ள முயல்வார்கள்.''

''நம் இந்தியக் கோஷ்டிக்கும் ஆட்டக்காரர்களை முன்கூட்டித் தேர்ந்தெடுத்தால் இந்தத் தோல்விப் பிரச்னை குறையும் என்கிறீர்களா?''

''ஆம். இந்தியா டெஹ்ரானுக்கு அனுப்பிய ஆட்டக் குழுவைத் தேர்ந்தெடுக்கக் கால தாமதம் செய்தது. கடைசி நிமிஷம் வரை ஆட்டம் தொடங்கும்வரை யார் யார் கலந்துகொள்ளப் போகிறார்கள் என்ற விவரம் மர்மமாகவே இருந்தது. டென்னிஸில் புகழ் பெற்ற ஆட்டக்காரர்கள் இந்தியாவில் இருக்கிறார்கள். ஆனாலும் டெஹ்ரானில் படுதோல்வி டென்னிஸில் ஏற்பட்டதற்குக் காரணம் ஆட்டக்காரர்கள் தேர்ந்தெடுப்பதில் ஏற்பட்ட கால தாமதம் தான்! நம் பாக்ஸர்களும் 'அதெலடிக்' குழுவினரும் மானம் பறிபோகாமல் 4 தங்கம், 12 வெள்ளி, 12 வெண்கலப் பதக்கங்களைப் பெற்றது பெரிய காரியம்!''

இரானில் பதினைந்து கோடி செலவில் ஆர்ய மெஹர் ஸ்டேடியம் உருவாகியிருக்கிறது. ஒவ்வொரு வகை ஆட்டத்துக்கும் தனி ஸ்டேடியம். நீச்சல் போட்டிக்குக் கண்ணாடி மாளிகை போன்று ஸ்டேடியத்தை நிர்மாணித்திருக்கிறார்கள். - இவை ஹாஜி சங்கசயத் அப்துல் காதர் கண்டறிந்தவை. அந்த நாட்டைச் சுற்றிப் பார்க்க முடியாமல் திரும்பியது இவருக்குப் பெரும் குறை.

இந்திய வாலிபால் கோஷ்டியில் கலந்து கொண்டு ஆடிய ஆட்டக்காரர் ரமணராவ் கூறுகிறார்: ''எங்கள் வாலிபால் கோஷ்டி டெஹ்ரானில் ஐந்தாவது ஸ்தானத்தைப் பெற்றது. முதல் ஸ்தானம் ஜப்பானுக்கு! எங்களுக்கும் ஜப்பானுக்கும் நடந்த மாட்ச் 'திரில்'லிங் மாட்ச்! குள்ளமான ஜப்பானியர்கள் வாலிபால் ஆட்டத்துக்காக 6' 2''லிருந்து 6'6'' வரை உயர்ந்துள்ளனர். ஆட்டத்தில் மட்டுமல்ல வளர்ச்சி; உடலே வளர்ச்சியுற்றிருக்கிறது! எவ்வளவு பிரயாசை எடுத்துக்கொள்கிறார்கள் பாருங்கள். அதோடு ஆட்ட தந்திரம் வேறு! முன்னணி ஆட்டக்காரர்களில் ஒருவர் பந்தை அடிப்பது போல் 'பாவலா' செய்து குதிக்கிறார்! அவரைச் சமாளிக்க எதிர்த்த கோஷ்டி தயாராகும் போது அவருக்குப் பின்னால் உள்ள ஆட்டக்காரர் குதித்து அடித்துவிடுகிறார்! இப்படிப் பல தந்திரோபாயங்களைத் தெரிந்து வைத்திருக்கிறார்கள்!''

பேட்டி: **குண்டுமணி**



## கோட்டை கட்டியதும்: கோட்டை விட்டதும்!

நானும் எனது நண்பர்களும் பஸ்ஸுக்காகக் காத்திருந்தோம். எங்களைப் போலவே இன்னும் பலரும் காத்துக் கொண்டிருந்தார்கள்.

பஸ் வந்தது. அனைவரும் முண்டி அடித்துக் கொண்டு ஏறிவிட்டனர். ஆனால் பஸ் கண்டக்டர், ''நாங்கள் 'ஓவர்லோடு' ஏற்றுவதில்லை... எனவே தயவுசெய்து அதிகப்படியாக உள்ளவர்கள் இறங்கி விடுங்கள்'' என்று கூறினார்.

ஆனால் ஒருவரும் இறங்கவில்லை. நேரமும் ஆகிக் கொண்டே இருந்தது. உடனே என் நண்பன் ஒருவன், ''கண்டக்டர் ஸார்! இங்கு பஸ்ஸில் ஏறிய நாங்கள் எல்லோரும் ஏறக்குறைய இளைஞர்கள் தான். எனவே நீங்கள் அனைவரையும் இங்கேயே இறக்கி விட்டுவிட்டுப் பஸ்ஸைச் சற்றுத் தூரத்தில் நிறுத்தச் செய்யுங்கள். அங்கிருந்து பலமாக ஒரு விசில் கொடுங்கள். எங்களில் யார் முன்னால் ஓடி வருகிறார்களோ, அவர்களை வரிசைப்படி அளவோடு ஏற்றிக் கொள்ளுங்கள்'' என்றான்.

அதன்படி அனைவரும் ஓட, எங்களைப் பஸ்ஸில் இருந்தவர்கள் 'கமான்...கமான்...' என்று கூறி உற்சாகப்படுத்த ஒரே தமாஷ்!

அந்த மகிழ்ச்சியில் எனக்கு இடம் கிடைக்காததுகூடப் பெரிதாகப்படவில்லை!

—மாணிக்கவேலு



## பெரியோர்களே, சொன்னதைக் கேளுங்கள்!

குழந்தை சாப்பிடப் படுத்துகிறதா : அல்லது நீங்கள் அதைப் பாடாய்ப் படுத்துகிறீர்களா? — சிந்தியுங்கள்.

அழகான சூழ்நிலையில் அழகான தட்டு, டம்ளர்களோடு சாப்பாடு போடுங்கள்.

கொஞ்சம் கொஞ்சமாகப் பரிமாறுங்கள்.
திட்டிக் கொண்டே சாதம் போடாதீர்கள்.
சாப்பிடும் அளவைப் பற்றிக் குறை கூறாதீர்கள்.

அவசரப்படுத்தாதீர்கள்.

அப்படி உட்கார், இப்படி உட்கார் - இதை முதலில் சாப்பிடு, அதை முதலில் சாப்பிடு என்று கட்டாயப்படுத்தாதீர்கள்.

குழந்தைகள் விரும்பாத போது பெரியவர்களோடு உட்கார வைத்துச் சாதம் போடாதீர்கள்.

ஆதாரம்: சைல்ட் பிஹேவியர்
தகவல்: [illegible]

# 'டெபிலைஸ்ட்'

## துணிகளுக்கு ஒரு மகத்தான பலனைச் சேர்க்கிறது— சுருக்கம் விழாமலிருக்கின்றன

சுத்தமான பருத்தி துணிகளுக்கும் அல்லது காட்டன் சிந்தடிக் கலந்த துணிகளுக்கும் ''டெபிலைஸ்ட்'' ஒரு மகத்தான பலனைச் சேர்க்கிறது. சுருக்கம் விழாத தன்மைக்கென சோதிக்கப்பட்டது உங்கள் துணிகளுக்கு மிகக் குறைவான இஸ்திரி செய்வதுடன் பார்ப்பதற்கும் மிக அழகாக உள்ளது.

''டெபிலைஸ்ட்'' எனும் வியாபாரச் சின்னம் உலகப் புகழ் பெறுவதுடன் இந்தியாவில் உள்ள முதன்மையான மில்களான அரவிந்த், பின்னி, டி ஸி எம், பாம்பே டையிங், ஸ்ரீ அம்பிகா தாகர்ஸே, மற்றும் டாட்டா, மபத்லால் தயாரிக்கும் தரமான துணிகளுடன் திகழ்கின்றது.

நீங்கள் வாங்கும் ஒவ்வொரு மீட்டர் துணியிலும் TEBILIZED® மார்க் இருக்கிறதா என்று பார்த்து வாங்கவும்.




**TEBILIZED®** சுருக்கம் விழாத தன்மைக்கென சோதிக்கப்பட்டது.

® ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க்கின் உரிமையாளர்கள்
மேட்டூர் பியர்ட்ஸெல் லிட்.
தபால் பெட்டி எண். 7, சென்னை-1.

SISTA'S-MBT-190-TAM-A

## 11. கிராமத்திலிருந்து திருச்சி

### மலைக்கோட்டைக்கு அருகே மனக்கோட்டை!

நாட்கள் ஓடி ஓடிக் கிருஷ்ணமூர்த்திக்குப் பதினறு வயதுக்கு மேல் ஆகிவிட்டது.

''என்ன வேங்கடராமா! தம்பியை எப்படியாவது படிக்க வைக்க வேண்டாமா?'' என்று அய்யாசாமி அய்யர் கேட்பார்.

''நான் எவ்வளவோ சொல்லியும் அவன் கேட்க வில்லை. அக்கா தங்கைகளுக்குக் கல்யாணம் அது இது என்று குடும்பம் கடன் பட்டுக் கிடக்கையில், தன்னால் பணச் செலவு ஏதும் கூடாது என்கிறுன். அவன் படிக்காவிட்டாலும் எப்படியும் பிழைத்துக் கொள் வான், நல்ல செயலில் இருப்பான் என்று எனக்கு நிச்சயமாய்த் தோன்றுகிறது.''

இதுபோல் பல தடவை அவர்கள் பேசிக் கொள் வது உண்டு.

ஒரு நாள் கிருஷ்ணமூர்த்தியின் சித்தி தர்மி அம்மாள், அக்காவையும் குழந்தைகளையும் பார்த்து விட்டுப் போவதற்காகத் திருச்சிராப்பள்ளியிலிருந்து புத்தமங்கலத்துக்கு வந்தாள். அவளுடைய கணவர் அந்த நகரில் ஒரு சொற்ப வேலையில் இருந்தார்.



# பொன்னியின் புதல்வர்

**சுந்தா**

தர்மி அம்மாள் வந்ததற்கு மறுநாள், அய்யா சாமி அய்யரின் மனைவி அபயம்பாள், அவளைத் தன் வீட்டுக்குக் கூட்டிச் சென்றுள். அவளும் அய்யரும் சேர்ந்து, அந்த அம்மாளிடம் கிருஷ்ணமூர்த்தியின் படிப்பு சம்பந்தமாக யோசனை ஒன்றைத் தெரிவித் தார்கள். கிருஷ்ணமூர்த்தியை அவள் திருச்சிக்குக் கூட்டிக் கொண்டு போய், அவளுடைய வீட்டில் சாப்பாடு போட்டு வைத்துக் கொள்ள வேண்டியது. பள்ளிக்கூடச் சம்பளம், கைச்செலவு முதலியவற்றுக்கு வேங்கடராமன் எப்படியாவது சரிக்கட்டிக் கொஞ்சம் பணம் அனுப்ப வேண்டியது.

இந்த ஏற்பாட்டுக்கு மகிழ்ச்சியுடன் தர்மி அம்மாள் சம்மதித்தாள். அவளாகவே இந்த ஏற் பாட்டை அக்காவிடம் தெரிவித்தாள். பிறகு இருவருமாய் வேங்கட ராமனிடம் தெரிவித் தார்கள்.

எல்லோருக்கும் அது மிக நல்ல ஏற்பாடாய்ப் பட்டது — அதில் சம்பந் தப்பட்ட பிள்ளையைத் தவிர. கிருஷ்ணமூர்த்தி







1. 'கல்கி' பேசுகிறார்.
2. இடையாற்றுமங்கலம் ரங்கசாமி ஐயர்.
3. ஹிந்து செகண்டரி பள்ளி.
4. சித்தப்பா, சித்தி.
5. ''தம்பி வகுப்பில் முதலாவதாக வர வேண்டும் என்ற ஆசை பல சமயம் அடியாகவும் கிள்ளாகவும் மாறுவதுண்டு.''
6. திருச்சி மலைக்கோட்டை, தெப்பக் குளம்.
7. தம்பி கப்புணி.
8. எம். டி. சீனிவாசன்.

யின் ஆட்சேபணை என்னவென்றால் பள்ளிக்கூட விதிகளின்படி, அவனை மூன்றும் ஃபாரத்தில்தான் சேர்த்துக் கொள்வார்கள். பதினேழாவது வயதில் அவ்வளவு சின்ன வகுப்பில் படிக்க வெட்கமாயிருக்கும்.

''உன்னைப் பார்த்தா யாரும் பன்னிரண்டு வயசுக்கு மேல் மதிக்க மாட்டா'' என்று அபயம் பாள் சொன்னாள்.

''என்னோட சிநேகிதங்க முத்துவும் கப்புவும் இப்போ அங்கே காலேஜிலே சேர்ந்திருக்காங்க. அவங்க கண்ணெதிரே நான் எப்படி அத்தனை சின்னக் கிளாஸிலே படிக்க முடியும்?''

''அவா ஒன்னும் உன்னைக் கேவலமாக நினைக்கமாட்டா'' என்றான் வேங்கடராமன். ''நம்ம குடும்ப நிலைமை அவாளுக்குத் தெரியாதா என்ன?''

''சிநேகத்தைத் தொடர்ந்து கொண்டாட நீ வந்தியேன்னு நிஜமாவே அவா சந்தோஷப் படுவா'' என்றார் அய்யர்.

அவர்களைத் திருப்தி செய்யும் பொருட்டு, இறுதியில் கிருஷ்ணமூர்த்தி திருச்சிக்குச் செல்லச் சம்மதித்தான்.

மறு நாளே சித்தியுடன் புறப்பட்டான். ஏதோ தொலை தேசத்துக்குச் செல்கிறவனைப் போல, அவனைக் கிராமத்தார் அனைவரும் வழி அனுப்பி வைத்தார்கள்.

அதற்கு முன்னால், தஞ்சாவூர் மாவட்டத்துக்கு வெளியே கிருஷ்ணமூர்த்தி பிரயாணம் செய்ததில்லை. அதன் காரணமாய், திருச்சியைப் பார்க்கப் போகிறோம் என்கிற ஆவல் மனத்திலே எழுந்தது. திருச்சியில் வேறு என்ன இருக்கிறதோ இல்லையோ, மலைக்கோட்டை இருக்கிறது! ரயிலின் சக்கரங்கள் ''மலைக் கோட்டை, மலைக் கோட்டை'' என்று தாளம் போட்டுச் சொல்வது போல் ஒலித்தன.



மலைக் கோட்டைக்கு வெகு அருகே நாகநாத சுவாமி கோயிலின் குளத்தை அடுத்தாற்போல், சித்தியின் வீடு இருந்தது. ஆனால் அதைக் கண்டு கிருஷ்ணமூர்த்திக்கு மகிழ்ச்சி உண்டாவதற்குப்







பதிலாகத் துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. அத்தனை உயரமான மலைக்குப் பக்கத்தில் இத்தனை சின்ன வீடா? அதுவும் ஒரு சந்துக்குள்? பாசி படிந்த குளத்தையும் உச்சிப் பிள்ளையார் கோயிலையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு அந்தச் சின்ன வீட்டுக்குள் நுழைந்தான் கிருஷ்ணமூர்த்தி. பசுமையும் அழகும் விரிந்து நிறைந்த கிராமத்தையும் விசாலமான வீட்டையும் விட்டு, ஏன் அங்கே வந்தோம் என்று வருந்தினான். திரும்பிப் போய் விட்டால் என்ன என்று எண்ணினான்.

உள்ளே சித்தப்பா வேங்கடாசலம் அய்யர் அவனை அன்புடன் வரவேற்றதையும், அவருடைய மகன் ஏழு வயதுச் சுப்புணி ''அண்ணா!'' என்று அவன் காலைக் கட்டிக் கொண்டதையும் கண்டு, கொஞ்சம் மனத்தைத் தேற்றிக் கொண்டான் இளைஞன். அவனைக் கூட்டி வந்த காரணத்தைச் சித்தி சொல்லக் கேட்டு, ''பேஷா நம்மாத்தில் இருந்து படிக்கட்டும். பக்கத்திலேயே பள்ளிக்கூடம் இருக்கு'' என்று சித்தப்பா சொன்னார். அவர்களுடைய பரிவு காரணமாய் அந்தச் சிறு வீடு பெரியதோர் அன்பு மாளிகையாகக் கிருஷ்ணமூர்த்திக்குத் தோன்றலாயிற்று.

பக்கத்திலுள்ள பள்ளிக்கூடம் என்று சித்தப்பா குறிப்பிட்டது ஹிந்து ஸெகண்டரி ஸ்கூல். கல்வித் தொண்டுக்குத் தம்மை அர்ப்பணம் செய்து கொண்ட இடையாற்று மங்கலம், ரங்கசாமி அய்யர், தம்மைப் போலவே கல்வித் தானத்தைச் சிறப்பாகக் கருதிய மதனகோபால தீட்சிதரின் துணையுடன் அந்தப் பள்ளியை நிறுவியிருந்தார். பின்னர் அது, உயர்நிலைப் பள்ளியாய் விரிவடைந்து, நிறுவிய அய்யரின் பெயரையொட்டி, ஈ. ஆர். ஹைஸ்கூல் என்று புதுப் பெயர் கொண்டது. பழைய பள்ளி பிரதானத் தெப்பக் குளத் தெருவில் இன்னமும் இருக்கிறது. முகப்பு மட்டும் மாறி உள்ளது.

அந்தப் பள்ளியின் பதிவுப் புத்தகத்தைப் பார்த்ததில், அதில் கிருஷ்ணமூர்த்தி, 1917 அக்டோபர் மாதம் 16ந் தேதியன்று, மூன்றும் படிவம் ''பி'' பகுதியில் சேர்ந்தான் என்று தெரிந்தது. அந்தத் தேதி, கல்வி ஆண்டு தொடங்கி நாலு மாதங்கள் ஆனதைக் குறிக்கிறது. அவ்வளவு தாமதித்துச் சாதாரணமாய் எந்த மாணவனையும் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள். சோதனை மூலம் கிருஷ்ணமூர்த்தியின் அறிவுத் தரம் தெரிய வந்ததாலும், வீணே அவனை எட்டு மாதங்கள் காக்க வைக்க வேண்டாம் என்ற பரிவினாலும், ரங்கசாமி அய்யர் விதிகளைத் தளர்த்தி அவனைச் சேர்த்துக் கொண்டாராம்.

கிருஷ்ணமூர்த்தி அதில் சேர்ந்த வாரத்திலேயே, அவனுடைய தமிழ் எழுத்துத் திறமை புலனாயிற்று. தமிழ்ப் பண்டிதர் பெரியசாமிப் பிள்ளை, ''விவேகானந்தரின் தொண்டு'' என்பது பற்றித் தம் வகுப்பு மாணவர்களைக் கட்டுரை எழுதச் சொன்னார். மறு நாள் அவர் வகுப்புக்கு வந்ததும், கிருஷ்ணமூர்த்தியின் வியாசத்தைப் புகழ்ந்து பேசி அதைப் படித்துக் காட்டினார். அதைக் கேட்டுப் பையன்கள் எல்லாருமே புதிய மாணுக்கனை வியப்புடன் பார்த்தார்கள். எல்லாரையும் விட அதிகமாய் வியந்தான் எம். டி. சீனிவாசன் என்ற பையன். வகுப்பு முடிந்ததும் அவன் கிருஷ்ணமூர்த்தியை அணுகி, தன்னுடைய பாராட்டைத் தெரிவித்து, தன்னை நண்பனாய் ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினான்.

அந்தச் சீனிவாசன் பின்னர் ரயில்வே கணக்கு இலாகாவில் உத்தியோகம் பார்த்து, ஓய்வு பெற்று இப்போது சென்னையில் வசித்து வருகிறார். பள்ளி நாட்களுக்குப் பல வருடங்களுக்குப் பிறகு, 1936ல் புகழுடனும் செல்வாக்குடனும் இருந்த தமது பழைய பள்ளித் தோழனை, ஓர் உதவி நாடி சீனிவாசன் காணச் சென்றார். அவரைக் கிருஷ்ணமூர்த்தி அன்புடன் அணைத்து வரவேற்றார். வேலை இல்லாமல் கஷ்டப்படும் தமது மருமானுக்கு ஒரு வேலை தேடிக் கொடுத்தால் உபகாரமாய் இருக்கும் என்று சீனிவாசன் விண்ணப்பித்துக் கொண்டார். உடனேயே கிருஷ்ணமூர்த்தி வாசனிடம் பேசி, ஆனந்தவிகடன் விற்பனை இலாகாவில் நியமனம் வாங்கிக் கொடுத்தார். ''அந்த வேலையில் என் மருமான் நிலைக்காமல் வேறு வேலைக்குப் போய்விட்டான் என்றாலும், திண்டாடிக் கொண்டிருந்த சமயத்தில் கிருஷ்ணமூர்த்தி செய்த உதவியை, நானும் அவனும் நன்றியுடன் நினைத்துக் கொண்டேயிருக்கிறோம்'' என்று சீனிவாசன் சொன்னார். அவருடைய நினைவுகளை மீண்டும் பள்ளி நாட்களுக்குத் திருப்பும் நோக்கத்துடன், ''வகுப்பில் கிருஷ்ணமூர்த்தி எப்படி நடந்து கொள்வார்?'' என்று இந்த நூலாசிரியன் கேட்டான்.

''வகுப்பில் அவன் முதல்வனயிருந்த போதிலும், இருக்கிற இடம் தெரியாதபடி, கடைசி பெஞ்சியில் ஓர் ஓரத்தில் தான் உட்கார்ந்திருப்பான். வாத்தியார்கள் கேட்கும் எந்தக் கேள்விக்கும் அவனால் சரியான பதில் சொல்ல முடி



மதுரை பிரபல தேசபக்தர் ஸ்ரீ ஏ. வைத்யநாத அய்யர் அவர்களது பேத்தியும், வழக்கறிஞர் ஸ்ரீ சங்கரன் அவர்களது புதல்வியுமான சௌ. ஸியாமளாவுக்கும் புதுச்சத்திரம் மிராசுதார் ஸ்ரீ துரைராஜன் அவர்கள் புதல்வர் சிரஞ்சீவி ஹர்ஷா வுக்கும் மதுரையில் 29-8-74அன்று திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

திருமணத்துக்கு உறவினர்களும் நண்பர்களும் நகரப் பிரமுகர்களும் ஏராளமாக வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்



ஸ்ரீ R. வெங்கட்ராமன் பம்பாய், ஏர் இந்தியா, (Director of Planning & I.R.) அவர்கள்குமாரர் சிரஞ்சீவி கண்ணனுக்கும், ஊட்டி ஸ்ரீ P. S. கைலாசம் அவர்கள் குமாரத்தி சௌ. ரேகாவுக்கும் 22-8-74ல் சென்னையில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் அதையொட்டி பம்பாய், தாஜ்மஹால் ஹோட்டலில் 29-8-74ல் நடைபெற்ற வரவேற்பு வைபவத்துக்கும், உறவினர்களும், நண்பர்களும் நகரப் பிரமுகர்கள் பலரும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்

யும் என்றாலும், கையைத் தூக்கிக் கொண்டு எழுந்திருக்க மாட்டான். குறிப்பாகத் தன்னைக் கேட்டால்தான் சொல்வான். பாடம் நடக்கும் போது அவன் அதை ஒரே கவனமாய்க் கேட்டு அப்படியே மனத்தில் பதித்துக் கொள்வான். அந்தக் கிரகிப்புச் சக்தி காரணமாய், வீட்டிலே அவன் பாடம் படிக்க வேண்டிய அவசியமே இராது. வேறு புத்தகங்களைத்தான் வீட்டிலே படிப்பான்.''

''என்னவிதமான புத்தகங்கள் என்பது நினைவிருக்கிறதா ?''

''ஒரு ஜாதிக்காய்ப் பெட்டி நிறைய இங்கிலீஷ் புத்தகங்கள் வைத்திருந்தான். தேசியத் தலைவர்களின் வரலாறுகள் அல்லது பிரசங்கங்கள். பெரும்பாலும் ஜி. ஏ. நடேசன் கம்பெனியார் வெளியிட்டவை. அவற்றில் சில பகுதிகளை எனக்கு வாசித்துக் காட்டி, எனக்குப் புரியாத வரிகளுக்குத் தமிழில் விளக்கம் சொல்லுவான்.''

''ஏழைப் பையனான அவன் அத்தனை புத்தகங்களை எப்படி வாங்கி வைத்துக் கொள்ள முடிந்தது ?''

''கிராமத்திலிருந்து வரும் பணத்தில் எப்படியோ மிச்சம் பிடித்து வாங்கியிருப்பான் என்று தோன்றுகிறது. ஊரிலிருந்து கையோடு கொண்டு வந்தவைகளும் இருக்கலாம்..... ஆனால் அவனுடைய புத்தகப் பைத்தியத்துக்கு அதெல்லாம் எம்மட்டு? அப்போது பெரிய கடைத் தெருவில், ஒரு மாடியிலிருந்த முனிசிபல் நூலகத்துக்குப் போவான். அங்கேயுள்ள புத்தகங்களையெல்லாம் விழுந்து விழுந்து படிப்பான்.''

அந்த நூலகத்தைப் பற்றியும், அதில் முக்கியமான ஒருவரை முதல் தடவையாகப் பார்த்ததைப் பற்றியும் பல ஆண்டுகளுக்குப் பிறகு கல்கி, தமது பத்திரிகையின் 18–7–1948 இதழில் எழுதினார் :

திருச்சிராப்பள்ளி பெரிய கடைத் தெருவில் ஒரு கட்டடத்தின் மச்சியில் இலவச வாசகசாலை ஒன்று இருந்தது. நாலு பீரோக்கள் நிறைய புத்தகங்கள் இருந்தன. பெரும்பாலும் ஆங்கிலப் புத்தகங்கள்தான். அவற்றில் தேசிய இயக்கம் சம்பந்தமான புத்தகங்கள் அதிகமாய் இருந்தன.

அறையின் நடுவில் நீளமான மேஜை ஒன்று போட்டிருந்தது. இரு புறத்திலும் சில கையில்லாத நாற்காலிகள் கிடந்தன. அவற்றில் ஒன்றில் உட்கார்ந்து ''லோகமான்ய திலகர் வழக்கு'' என்ற புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தேன்.

ஒரு மனிதர் அப்போது மச்சுப் படி ஏறி மேலே வந்தார். வருகையில் அவரை ஒருவரும் கவனிக்கவில்லை. வந்ததும் நாற்காலியில் உட்காருவதற்குப் பதிலாக நடுவில் போட்டிருந்த நீள மேஜையின் மேல் உட்கார்ந்தார். உடனே எல்லோரும் அவரைக் கவனித்தார்கள். நானும் பார்த்தேன். அறிவும் ஆற்றலும் ஆத்திரமும் தன்னம்பிக்கையும் அவருடைய முகத்தில் சுடர்விட்டுப் பிரகாசித்தன......

அந்த மனிதர் பக்கத்திலே நான் கையில் வைத்துக் கொண்டிருந்த புத்தகத்தைப் பார்த்தார்.

''ஓகோ! இந்தப் பிள்ளையாண்டான் திலகர் பிரசங்கம் படிக்கிறான், திலகர் பிரசங்கம்! எதற்காகப் படிக்கிறான், தெரியுமா? இங்கிலீஷை 'இம்ப்ரூவ்' செய்து கொள்வதற்காகப் படிக்கிறான். இந்தப் புத்தகமே தமிழில் இருக்கட்டும்; படிக்கமாட்டான்....''

வாசகசாலைக்கு வந்துவிட்டுப் போனவர் பேராசிரியர் வ. ரா. அவர்கள்தான். அவர் போனவுடன் அங்கிருந்த மற்றவர்கள் பேசியதிலிருந்து அந்த விவரம் தெரிந்து கொண்டேன்.

•

அந்த நூலகத்துக்குப் போகாத மாலை வேளைகளில், தனது கிராமத்துத் தோழர்களான முத்துவையும் சுப்புவையும் கிருஷ்ணமூர்த்தி தேடிச் செல்வான்.

சில நாட்களில் நண்பர்கள் மூவரும் காவேரி மணலில் உட்கார்ந்து, பாரதி பாடல்களை ஒரே குரலில் ஓங்கிப் பாடுவார்கள். அப்படிப் பாடுகையில் மூச்சிலே சக்தி பிறப்பது போல் தோன்றும்.

ஒரு மாலை அதே மாதிரி பாடி முடிந்ததும், ''சக்தி கொண்டு, அந்நிய ஆட்சியை எதிர்த்துப் போராட வேண்டுமானால், நாம் கல்யாணம் செய்துகொள்ளக் கூடாது; குடும்பப் பந்தத்தில் சிக்கிக் கொள்ளக் கூடாது'' என்று முத்துக் கிருஷ்ணன் சொன்னான்.

''என்ன இப்படித் திடீரென்று ?'' என்று கிருஷ்ணமூர்த்தி கேட்டான்.

''விவேகானந்தரின் போதனைகளைக் கேட்டு இப்படித் தோன்றிவிட்டது.''

''அப்படியானால் சுயராஜ்யம் கிடைக்கிற வரை கல்யாணம் செய்து கொள்ள மாட்டாயாக்கும்.''

''கிடைத்த பிறகும் செய்து கொள்ள மாட்டேன்.''

''நீ என்ன சாமியாராக ஆகப் போகிறாயா ?'' என்று சுப்பிரமணியம் கேட்டான்.

''ஆனாலும் ஆவேன். துறவி ஒருத்தன்தான் முழு மனத்தையும் மக்கள் சேவையில் செலுத்த முடியும் என்று விவேகானந்தர் சொல்கிறார். அது உண்மைதானே ?''

''நீயும் சாமியாராக ஆகப் போகிருயா ?'' என்று கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்துச் சுப்பிரமணியம் கேட்டான்.

''அதைப் பற்றி நான் யோசிக்கவில்லே. ஆனுல் நான் நிச்சயம் தேசத் தொண்டனுய் இருப்பேன். சுயராஜ்யத்துக்காகச் சண்டை நடந்தால் அதில் நான் சேர்ந்து கொள்வேன். அரவான் மாதிரி உயிர்த் தியாகம் செய்வேனே என்னவோ தெரியாது. ஆனுல் நிச்சயமாய்ச் சண்டை போடுவேன்... என்னைக் கேட்டாயே, நீ என்ன செய்யப் போகிருய் ?''

''சொல்ல வெட்கமாக இருக்கிறது. எனக்கு ஏற்கவவே பெண் தேடிக் கொண் டிருக்கிருர்கள்.''

''நிஜமாகவா ?''

''நிஜமாகத்தான். எங்கள் குடும்பத்திலே சிக்கிரமே கல்யாணம் செய்யறது தான் வழக்கம்.''

''அப்படி என்ருல், நம்ம சுப்புப் பிள்ளைவாள் சீக்கிரமே குடியும் குடித் தனமுமாய் இருப்பார்'' என்று சொல்லிக் கிருஷ்ணமூர்த்தி சிரித்தான்.

இன்னும் கொஞ்சம் பேசிக் கொண்டிருந்துவிட்டு மூவரும் தனித் தனியே பிரிந்து நடந்தார்கள். கிருஷ்ணமூர்த்தி கொஞ்சம் வேகமாகவே நடந்தான். அவனுக்காகச் சித்தி காத்திருப்பாள். தினமும் இரவில் அவனுக்குச் சாதம் போட்டுவிட்டுத்தான் அவள் சாப்பிடுவாள்; அல்லது அவனுக்கு எதிரே தானும் உட்கார்ந்து, அவனுக்குச் சரியாய்த் தானும் வேடிக்கையாய்ப் பேசிக் கொண்டே சாப்பிடுவாள். அவனுடைய எதிர்காலம் பற்றிக் கேட்பாள்.

''உனக்குத் தாசில்தான் பெரிய பதவியாகத் தோன்றுகிறது, இல்லேயா, சித்தி?'' என்ருன் கிருஷ்ணமூர்த்தி.

''இல்லேயோ, பின்னே ! சாரட்டிலே போறதும், கலெக்டர் துரைகிட்டே பேசறதும், பில்லேச் சேவகனும் ஆளும் தேளும் கைகட்டி நிக்கறதும் ....''

ஆனுல் கிருஷ்ணமூர்த்தியின் உள்ளம் வேறுவிதமாய்ச் சிந்தித்துக் கொண்டிருந்ததே ! கிருஷ்ணமூர்த்தி கலத்தைவிட்டு எழுந்தவுடனேயே, ''அண்ணு! காப்பி எழுதியாச்சு'' என்று வாசல் சாய்ப்புப் பந்தலிலிருந்து சுப்புணி கத்தினுன்.

தம்பியின் பக்கத்தில் உட்கார்ந்து கையெழுத்துப் பயிற்சிக்காகக் காலேயில் எழுதிக் கொடுத்த ஆங்கில வாக்கியத்தை அவன் கோணலும் மாணலுமாய்ப் பிரதி எழுதியிருந்ததைப் பார்த்துக் கோபித்துக் கொண்டான் கிருஷ்ணமூர்த்தி. ''அழகான இந்த வாக்கியத்தை இப்படியா அலங்கோலம் செய்யறது?'', என்று கேட்டான்.

அந்த வாக்கியம் என்னவென்ருல் :

**Swaraj is our birth Right.** (சுயராஜ்யம் நமது பிறப்புரிமை.)

தன்னைப் போலவே தம்பியை வகுப்பில் முதல்வனுய் ஆக்க வேண்டும் என்று கிருஷ்ணமூர்த்தி ஆசைப்பட்டு மிக்க அக்கறையுடன் அவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தான். அந்த ஆசை சில சமயம் அடியாகவும் கிள்ளாகவும் மாறுவதுண்டு.

அண்ணு அடித்த ஒவ்வோர் அடியையும், கிள்ளிய ஒவ்வொரு கிள்ளையும், இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு, சுப்புணி என்ற வி. சுப்பிரமணியம், இனிய நினைவுகளாய்க் கொண்டிருக்கிருர். ''அப்போது படிக்கையிலும் சரி, பின்னர் வாழ்க்கை நடத்துகையிலும் சரி, அண்ணு எனக்குச் செய்த உதவிகளைச் சொல்லி முடியாது'' என்று அவர், நன்றிப் பெருக்குடன், இந்த நூலாசிரியனிடம் தெரிவித்தார். ''அண்ணுவின் தயவினுல்தான் இப்போது இந்தத் திருச்சியில் இவ்விதச் செழிப்புடன் இருக்கிறேன்.''

கிருஷ்ணமூர்த்தியின் புனைபெயர்களைக் கொண்ட மூன்று நிறுவனங்களைச் சுப்பிரமணியம் நடத்தி வருகிருர்: அகஸ்தியர் புத்தக சாலே, தேனீ அச்சகம், கர்நாடக பைண்டிங் நிறுவனம். இவற்றில் முதலாவதான புத்தகசாலேக்கு அகஸ்தியர் பெயரைக் கல்கி தான் வைக்கச் சொன்னுர். அப்படிச் சொன்னதுடன், அதற்கு மூலதனமும் முன்பணமாய் உதவினுர். அவ்வப்போது கொள்முதலுக்கும் பணம் கொடுத்து வாங்கினுர்.

அண்ணு எழுதிய ஒவ்வோர் எழுத்தையும் தம்பி படித்து மகிழ்ந்து வந்ததுடன், அவர் ஈடுபட்ட ஒவ்வொரு இயக்கத்திலும் பங்கு கொண்டார். — தமிழிசை இயக்கம், ''ராஜாஜி வேண்டும்'' என்ற இயக்கம் போன்றவை. பிரதேச காங்கிரஸ் கமிட்டியில் உறுப்பினராய் இருந்து, எழுத்து மூலம் அண்ணு ஆதரித்த கொள்கைகளைச் செயல் மூலம் தம்பி ஆதரித்தார். ஒவ்வொரு தேர்தல் பிரசாரத்திலும் அவர் ஈடுபட்டு வந்தார். 1952 தொடக்கத்தில் நடந்த பொதுத் தேர்தலே முன்னிட்டு, காங்கிரசுக்கு வோட்டுப் போட வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தி, 30—12—'51 கல்கி இதழில் அதன் ஆசிரியர் எழுதிய தலையங்கத்துக்கு, தம்பி சுப்பிரமணியம், தமது அச்சகத்தில் பல்லாயிரக்கணக்கில்

# தீரஜ் சௌடாவைத் தெரியுமல்லவா? எதிலுமே மிகச் சிறந்தவைதான் வேண்டும் அவருக்கு...

**எனவே இந்து ரோல் பிலிம், இந்து புரோமைட் பேப்பர் இவற்றை அவர் உபயோகிப்பதில் வியப்பில்லை. அவர் மட்டும் அல்ல. மிட்டர் பேடியும், ஆர். கிருஷ்ணனும் கூடத்தான்.**

இவர்கள் எல்லோரும் மிகச் சிறந்த, புகழ்பெற்ற புகைப்பட நிபுணர்கள். எந்த பிரபல வெளிநாட்டுப் பிலிம்களையும் அவர்கள் பயன்படுத்த முடியும். என்றாலும் அவர்கள் இந்துவையே தேர்ந்தெடுக்கிறார்கள். காரணம், இந்துவின் தரமே.

உங்கள் காமிராவும், லென்ஸும் எந்தத் தயாரிப்பாக இருந்தாலும், நீங்கள் எடுக்கப் போவது எவ்வித புகைப்படமாக இருந்தாலும், இந்து ரோல் பிலிமையும், புரோமைட் பேப்பரையுமே பயன்படுத்துங்கள்.

காரணம், ஒரு நல்ல ரோல் பிலிமும் புரோமைட் பேப்பரும் அளிக்க வேண்டிய எல்லாப் பயன்களையும் இந்து அளிக்கிறது. தெளிவான மாறுபாடு, சிறப்பான ஒளிப்பதிவு, ஒரே சீரான தரம், துல்லியமான கிரெயின்கள் இவற்றை அளிப்பது இந்து. அது மட்டுமல்ல, இந்து மிக எளிதில் கிடைக்கிறது. எனவே புகைப்பட வல்லுநர்கள் இந்துவையே தேர்ந்தெடுக்கிறார்கள்.

**இத்துறையில் தன்னிறைவு பெற, தன்னிகரற்ற சேவையில் இந்து அளிப்பவை:**

இந்து ரோல் பிலிம். இந்து போட்டோகிராபிக் பேப்பர்கள். இந்து சினி பாஸிடிவ். இந்து சினி சவுண்ட் நெகடிவ். இந்து எக்ஸ்ரே பிலிம். இந்து மீடியம் காண்ட்ராஸ்ட் கிராபிக் ஆர்ட்ஸ் பிலிம். இந்து டயாபாஸிடிவ். இந்து டாகுமெண்ட் காபியிங் பேப்பர்.

இந்துஸ்தான் போட்டோ பிலிம்ஸ் மான்யுபாக்சரிங் கோ. லிமிடெட்
இந்துநகர், உதகமண்டலம் 643005

**இந்துவின் தரத்துக்குச் சான்று உங்கள் கண் எதிரே.**




SAA/HPF/1378

பிரதிகள் எடுத்து நெடுகிலும் வினியோகம் செய்தார்.

கல்கிப் பத்திரிகை தொடங்கவிருந்த சமயத்தில், ஆயிரம் ரூபாய் வீதம் ஐந்து பங்குகளை அவர் வாங்கிக்கொண்டு அண்ணாவுக்குப் பண 'பலம் அளித்தார்.

இந்தத் தகவல்களை யெல்லாம்விட அதிகப் பெருமையுடன் ஒன்றைச் சொன்னார் கல்கியின் தம்பி: "என் அண்ணா முதன் முதலாக ஆனந்தவிகடனில் எழுதிய 'ஏட்டிக்குப் போட்டி' என்ற கட்டுரையில், சகுனம் பார்ப்பதைப் பற்றிச் சொல்லி இருக்கிறார் அல்லவா? அந்தப் பகுதியில் வரும் சிற்றன்னை என் தாயார்தான். நானேதான் அதில் வரும் மணி. கொஞ்சம் காலத்தை மாற்றிக் கற்பனையைக் கலந்திருக்கிறார்."

அவர் குறிப்பிட்ட பகுதி இதோ:

நான் கலாசாலையில் படித்துக் கொண்டிருந்தபோது, என் சிற்றன்னையின் வீட்டில் சில நாட்கள் இருக்க நேர்ந்தது. அந்த அன்னையின் புதல்வன் மணி என்பவன் இரண்டாவது பாரத்தில் படித்துக் கொண்டிருந்தான்; ஒரே பையனாதலால் அன்னைக்குப் பிள்ளையிடம் அபார பிரேமை. இத்துடன் சகுனம் பார்ப்பதில் அந்த அம்மாளுக்கு விசேஷப் பிரேமை உண்டு. தினசரி பையன் பள்ளிக்கூடம் போகும்போதுகூடச் சகுனம் பார்த்துத்தான் அனுப்பி வைப்பாள். வெறும் நாளிலேயே இப்படி யென்றால் பரீட்சையும் சேர்ந்து விட்டால் கேட்க வேண்டுமா? முதல் நாள் பையனுக்கு இங்கிலீஷ் பரீட்சை. எனக்கு விடுமுறை ஆதலால் வீட்டிலேயே இருந்தேன். சிற்றன்னை அன்று காலையில் அவசரம் அவசரமாக வீட்டுக் காரியங்களை முடித்துப் பையனுக்குத் தலை வாரிப் பின்னிக் குளிப்பாட்டி, சாதம் போட்டு உடை உடுத்துவிட்டாள். இதற்குள் மணி பத்து ஆகிவிட்டது. பையனை உள்ளே இருக்கச் செய்து வாசலில் வந்து பார்த்துவிட்டு, "வா, வா! யாரும் வரவில்லை, ஓடி வா!" என்றாள் தாயார். ஆனால், பையனுக்குக் கொஞ்சம் சுறுசுறுப்பு அதிகம். அவன் வாசற்படிக்கு வருவதற்குள், "உள்ளே போ, கொஞ்சம் தண்ணீர் சாப்பிடு!" என்று தாயார் கூறினாள். நான் வாசலில் போய்ப் பார்த்த போது விதவை ஒருத்தி சந்து திரும்பி வந்து கொண்டிருந்தாள். அடுத்த முறை பையன் கிளம்பும் போது ஒற்றைப் பிராமணர் ஒருவர் வந்தார். என் சிற்றன்னை பிராமணாபிமானம் நிரம்ப உள்ளவள்தான். ஆனால், அந்தப் பிராமணருக்கு அன்றைய தினம் அவள் கொடுத்த சாபங்களில் ஏதாவது ஒன்று பலித்தால் கூடப் போதும். அந்த மனிதருடைய உயிரை எந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த கம்பெனியாவது இன்ஷூர் செய்திருந்தால், அது வாயில் மண்ணை வாரிப் போட்டுக் கொள்ள வேண்டியதுதான்;..;.

இதற்குள் பத்து அடித்து இருபது நிமிஷம் ஆகிவிட்டது. கடைசியாக, "அப்பா! ஓடி வா! தண்ணீர்க் குடத்துடன் சுமங்கலி வருகிறாள்! திவ்வியமான சகுனம்" என்று தாயார் கூவினாள். பையன் அவசரமாகப் புறப்பட்டுச் சென்றான். சந்து திரும்பும் வரையில் மேற்படி சுமங்கலியைத் தவிர வேறு யாரும் எதிர்ப்படவில்லை; "நல்ல பேஷான சகுனம். குழந்தை நூற்றுக்கு நூறு மார்க்கு வாங்குவான் பார்!" என்றாள் குதூகலத்துடன். எனக்கு மட்டும் கொஞ்சம் சந்தேகமாகவே இருந்தது. ஆனால், சகுனத்தின் பலன் இப்படியாகும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. கால் மணி நேரம் ஆனதும் பையன் போனது போலத் திரும்பி வந்துவிட்டான். எங்கள் இருவருக்கும் தூக்கிவாரிப் போட்டது. "என்ன? என்ன?" என்று இருவரும் ஏககாலத்தில் கேட்டோம். "நான் போவதற்குள் மணி அடித்துப் பதினைந்து நிமிஷம் ஆகிவிட்டது. ஆகையால் பரீட்சை எழுதவிட மாட்டேன் என்று வாத்தியார் சொல்லிவிட்டார்!" என்றான் பையன். சிற்றன்னை கோபித்துக் கொள்வாள் என்று தெரிந்தும் என்னால் சிரிப்பை அடக்கிக் கொள்ளவே முடியவில்லை.

"சகுனம் பார்ப்பதை அண்ணா அதில் கேலி செய்திருந்த போதிலும், அவர் பரீட்சைக்குப் போன போதும், சகுனம் பார்த்துத்தான் அம்மா அனுப்பினாள்" என்றார் சுப்பிரமணியம். "அண்ணாவும் அதற்கு இணங்கித்தான் போனார்."

"சகுன நம்பிக்கையால் அல்லாமல் உங்கள் அம்மாவிடம் உள்ள மரியாதையால் அவர் இணங்கிப் போயிருக்கலாம் அல்லவா?" என்று கேட்டபோது அவர் சொன்னார்: "எப்படி வேண்டும் என்றாலும் வைத்துக் கொள்ளலாம். ஆனால் ஒன்று உண்மை. அந்த வருஷம் மூன்றாம் பாரத்தில் அண்ணா முதல்வராகத் தேறினார்."

அந்தப் பள்ளிக்கூடத்தின் அந்த வருடத்து மார்க்குப் பட்டியலைப் பார்த்ததில், ஆர். கிருஷ்ணமூர்த்தி, மொத்தம் 800யில் 591 வாங்கியதாகப் பதிவாகியிருக்கிறது. தமிழ்க் கட்டுரையில் 100க்கு 87. சரித்திரத்தில் 84, ஆங்கிலத்தில் 80. கணக்கில் 78. மற்றவைகளில் எதிலும் 50க்குக் குறைவில்லை.

பதினேழு வயதுப் பையன், அதுவும் தானாக நிறையக் கற்றுத் தேர்ச்சி அடைந்தவன், இத்தனை மார்க்குகள் வாங்கியதைக் கண்டு வியக்க வேண்டியதில்லை. வியப்புக்கு உரியது என்னவென்றால், அப்படிப்பட்ட பையன் பள்ளிக்கூடப் பாடங்களை அலட்சியம் செய்யாமல் அவற்றில் மனத்தைச் செலுத்தினான் என்பதுதான். (தொடரும்)

# ஒயிலுக்கு எழில்சேர்ப்பது



**Arthi**
வாஷ்-அண்ட் வியர் 2 x 2
வாயில்கள்

**Lavanya**
வாஷ்-அண்ட் வியர் 2 x 2 கேம்ப்ரிக்குகள்

**Suchitra**
டெர்.டி. வாயில்கள்

**Pushpanjali**
வாஷ் அண்ட் வியர் டைட் கேம்ப்ரிக்
வாயில்கள்

## தாவண்கெரே

நவநாகரிகத் துணிமணிகள்
ஸ்ரீ தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்
தாவண்கெரே, கர்நாடகம்.

Thomas DCM 16 a /tam

"நான் வரமாட்டேன்.... நான் வரமாட்டேன்" என்றுள் சுந்தரி தீர்மானமாக.

"அதுதான் ஏன் என்கிறேன்?" எரிச்சலுடன் கேட்டான் கல்யாணம்.

"என்னைப் பாருங்கள். எப்படி இருக்கிறேன்?" என்று கேட்டுக் கொண்டே எதிரில் வந்து நின்றுள் சுந்தரி.

"ஏன்? அழகாகத்தான் இருக்கிறாய். முப்பத்தாறு வயது என்று சொன்னுல் யாரும் நம்பவே மாட்டார்கள்" என்று 'விட்' அடித்தான் கல்யாணம்.

உண்மை வயதை அப்பட்டமாகச் சொன்னதும் சுந்தரியின் முகம் கடுகடுத்தது. "அதைக் கேட்கவில்லை. காதில் மூக்கில் கழுத்தில் பளிச்சென்று ஏதாவது நகை இருக்கிறதா ?"

"இல்லை. எல்லாம் கல்யாணத்தின்போது உன் பிறந்தகத்தில் செய்ததுதான். என்னைப் இறங்கி மெருகு குறைந்துதான் இருக்கிறது."

"ஒப்புக் கொள்கிறீர்கள், இல்லையா? உங்களுடைய நண்பர் நரசிம்மன் உங்கள் அளவுதான் சம்பாதிக்கிறுர். அவர் மனைவி பாரதியைப் பாருங்கள். வைரத் தோடு, வைர மூக்குத்தி, பட்டுப் புடவை என்று என்னமாக ஜொலிக்கிறுள். இத்தனைக்கும் இரண்டு குழந்தைகள் வேறு அவர்களுக்கு."

"அதற்கென்ன இப்போது ? நான் ஊதாரிதான். சேர்க்கத் தெரியாதவன்தான். அதற்கும் இப்போது நரசிம்மன் குழந்தை ஆண்டு நிறைவுக்குப் போவதற்கும் என்ன சம்பந்தம்?" — புரியாமல் கேட்டான் கல்யாணம்.

"ஆண்டுநிறைவுக்கு என்னைக் கூப்பிடுகிறீர்கள். நானும் வருகிறேன் என்றே வைத்துக் கொள்ளுங்கள். பாரதி என்னைப் பார்த்துவிட்டு என்ன கேட்பாள் தெரியுமா ?'

"என்ன கேட்பாள்? 'நீ எப்போது உன் குழந்தை ஆண்டு நிறைவுக்கு என்னைக் கூப்பிடப் போகிறுய்' என்று கேட்பாள். அவ்வளவுதானே ! 'சரியாக ஒரு வருடம் ஏழு மாதங்கள் பொறுத்துக் கொள்' என்று சொல்லேன்" என்று அவள் கன்னத்தைத் தட்டினுன் கல்யாணம். திருமணமாகிப் பதினைந்து வருடங்கள் கழித்து அப்போதுதான் முதல் முறையாகக் கருவுற்றிருந்தாள் சுந்தரி.

அவள் முகம் இலேசாகச் சிவந்தது. "போதுமே. இப்படிக் குழையக் குழையப் பேசி விடுவதில் ஒன்றும் குறைச்சல் இல்லை. பாரதி என்னைப் பார்த்து, 'உன் கணவருக்கும் என் கணவருக்கும் ஒரே சம்பளம்தானே! இரண்டு குழந்தைகள் இருந்தும்கூட நாங்கள் சிக்கனமாகச் செலவு செய்து நகையெல்லாம் வாங்கியிருக்கிறோம். நீ ஒன்றுமில்லாமல் நிற்கிறுயே. இத்தனைக்கும் நீங்கள் இரண்டே பேர்தானே!' என்று கேட்பாள்...." என்று மூச்சு விடாமல் பேசி நிறுத்தினுள்.

"நீயாக எதற்குக் கற்பனை பண்ணிக் கொள்கிறுய்? அதெல்லாம் கேட்கமாட்டாள்" என்று சமாளிக்கப் பார்த்தான் கல்யாணம்.

சுந்தரி மசியவில்லை. "நீங்கள் என்ன சொன்னுலும் சரி. ஒரு நகையும் இல்லாமல் அவள் வீட்டுக்குப் போக எனக்கு அவமானமாக இருக்கிறது" என்று சொல்லிவிட்டுத் திரும்பியவள், "கேவலம், ஒரு வைரத் தோடாவது வேண்டாமா?" என்று முணுமுணுத்தாள்.

பளிச்சென்று யோசனை வந்தது கல்யாணத்துக்கு. "அவ்வளவுதானே ? வைரத்தோடு இருந்தால் வருவா யல்லவா ?" அவன் எழுந்து சட்டையை மாட்டிக் கொண்டான்.

"இடீரென்று வருமா என்ன, வைரத் தோடு, நீங்கள் கேட்ட உடனேயே ?" என்று இகழ்ச்சியாகக் கேட்டாள் சுந்தரி.

"வருகிறதா இல்லையா பாரேன். எவளிடமாவது இரவல் வாங்கிக் கொண்டு வந்தால் போச்சு." கல்யாணம் செருப்பை மாட்டிக் கொண்டு தெருவில் இறங்கினுன்.

கல்யாணத்துக்குக் காரைக்காலில் என்னைப் — நிலவாயுக் கமிஷன் அலுவலகத்தில் நல்ல வேலை. எழுநூற்றுக்குமேல் சம்பளம். கணவன் மனைவி இரண்டே பேர்கள்தான். காரைக்காலில் தெருவுக்கு ஒரு 'பார்' இருந்தும்கூட மது என்றுல் முகத்தைச் சுளிப்பவன் அவன். வாங்கும் சம்பளத்தில் பாதிக்கு மேல் கரைவது அவனுடைய நண்பர்கள் கூட்டத்தால்தான். யாருக்கு எத்தனை கடன் கொடுத்தோம் என்பதையே நினைவு வைத்துக்




கொள்ள மாட்டான். ஒவ்வொரு சனிக்கிழமையும் திருநள்ளார் போகும்போது கூடவே பத்துப் பேர்களை அழைத்துப் போவான். பஸ் செலவோடு அன்றைய டிபன் செலவும் அவனுடையதுதான். சினிமாவுக்குப் போனுலும் இதே கதிதான். இப்படி இருக்கும் போது கல்யாணத்தின் சம்பளத்தில் பாதி அளவாவது சுந்தரியின் கைக்குக் கிடைப்பது அரிதுதான். சுந்தரிக்கு ஆத்திரம் பொங்கும். எத்தனையோ முறைகள் கெஞ்சியும், கடிந்தும் பார்த்துவிட்டாள். கல்யாணம் எதையும் காதில் போட்டுக் கொள்ளவேமாட்டான்.

"இந்தா, சுந்தரி !"

கல்யாணம் சின்னஞ்சிறு வெல்வெட் பெட்டியைத் திறந்தான். ஒரு ஜோடி வைரத்

தோடுகள் சொகுசாக உட்கார்ந்து பளிச் பளிச்சென்று கண்ணைச் சிமிட்டின.

''அடடா! என்ன ஜொலிப்பு! இப்படி ஒரு ஜோடி வாங்க வேண்டும் என்று ரொம்ப நாளாக எனக்கு ஆசை....'' என்று பெரு மூச்சுடன் கையில் வாங்கிப் பார்த்தாள்.

''பணம் சேர்த்தா வாங்கிக்கிட்டா போச்சு!'' என்றான் உற்சாகமாக.

''நீங்களா, பணம் சேர்க்கிறதா?'' என்று இகழ்ச்சியுடன் கேட்டாள் சுந்தரி.

தகுந்த பதில் அகப்படாததால் அவனுக்குக் கோபம்தான் வந்தது. ''சரி, சரி. பசி பிராணன் போகிறது. 'சோறு உண்டா இல்லையா? உனக்கு வைரத் தோட்டைப் பார்த்துக் கொண்டே இருந்தால் பசிக்கவே பசிக்காது. எனக்கும் அப்படியா?'' என்று எரிந்து விழுந்தான்.

''எல்லாம் தயார். வாருங்கள்'' என்று சமையல் அறைப் பக்கம் திரும்பினாள் சுந்தரி.

''அக்கா, அக்கா!'' என்று கூப்பிட்டபடி வேகமாக வந்தான் கோபு. ''சின்னக்காவுக்கு வலி எடுத்திருக்காம். பிரசவ ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போயிருக்கிறார்களாம். போன் வந்தது. உன்னிடமும் சொல்லச் சொன்னார் அப்பா. ஆபீசிலிருந்து நேரே இங்கேதான் வரேன்'' என்றான் அவள் தம்பி.

கோபுவுக்குக் கல்வி இலாகாவில் வேலை. அம்பகரத்தூரிலிருந்து பஸ்ஸில் காரைக்கால் வந்துவிட்டுப் போவான். இரண்டில் மூன்றில் சுந்தரியை எட்டிப்பார்த்துவிட்டுப்போவான்.

''இருடா, பிரசவ ஆஸ்பத்திரிக்குத்தானே போறே? நானும் வரேன்'' என்றவள் கணவனிடம், ''இதோ பாருங்கள். சாப்பிட்டு வீட்டை ஜாக்கிரதையாகப் பூட்டிக் கொண்டு ஆபீசுக்குப் போய் வாருங்கள். நான் சாயங்காலம் வந்துவிடுவேன். அப்படி அம்மா ஒத்தாசைக்கு இரண்டு நாட்கள் இருக்கச் சொன்னால் இருந்துவிட்டு வரவா?'' என்று அனுமதி கேட்டாள்.

''எத்தனை நாட்கள் வேணும்னாலும் இருந்து விட்டு வா. வீட்டை நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று விடைகொடுத்து அனுப்பினான்.

மைத்துனிக்கு ஆண் குழந்தை பிறந்ததாக ஆபீசுக்கே தகவல் வந்தது. மாலையில் ஆஸ்பத்திரிக்குப் போய்ப் பார்த்தான். ரோஜா மலர் போல் சின்னக் குழந்தையை அணைத்தபடி படுத்திருந்தாள் மைத்துனி. இன்னும் ஏழு மாதங்களில் சுந்தரியும் இப்படித்தான் படுத்திருப்பாள் என்பதை நினைக்க மகிழ்ச்சி பொங்கியது அவனுக்கு.





பண பலம்!

பணமிலா வரைஅவர்
இதயம் வளர்ந்தது
பணமெலாம் வரஅவர்
கதையும் வளர்ந்தது!

தமிழழகன்

---

அம்பகரத்தூரில் நடந்த புண்ணியாகவசனத்தில் கலந்து கொண்டு அன்று மாலையே கஸ்தூரியையும் அழைத்துக் கொண்டு காரைக்கால் வந்தான் கல்யாணம்.

"அப்பாடி ! என்ன குப்பை! வீட்டைப் பெருக்கவே இல்லையா முனியம்மா ?" என்றாள் கஸ்தூரி வீட்டைத் திறந்ததும்.

"நீ இருந்தா ஒரு மாதிரி, இல்லாட்டா ஒரு மாதிரிதான்" என்றான் கல்யாணம்.

கஸ்தூரி வீட்டை ஒரு முறை சுற்றி வந்து சாமான்கள் பத்திரமாக இருக்கின்றனவா என்று சோதனை செய்தாள். திடீரென்று நினைத்துக் கொண்டவள், "ஆமாம், அந்த வைரத்தோடு பத்திரமாக வைத்திருக்கிறீர்கள், இல்லையா? அது வந்த வேளை நான் போட்டுக் கொள்ளாவிட்டாலும் என் தங்கைக்கு நல்ல விதமாக ஆண் குழந்தையே பிறந்துவிட்டது. மூன்று பெண்களுக்குப் பிறகு...." என்றாள்.

கல்யாணத்துக்குத் திக்கென்றது. வைரத்தோடு இரவல் வாங்கின விஷயமே அப்போதுதான் அவனுக்கு நினைவு வந்தது. "வைரத்தோட்டை உன்னிடம் கொடுத்த போது தானே கோபு வந்தான். நீ பீரோவில் வைக்கவில்லை ?"

"நானாவது பீரோவில் வைப்பதாவது ? கோபு வந்து சொன்னதும் அலறி அடித்துக் கொண்டு ஓடியிருக்கிறேன். நான் எங்கே பீரோவில் வைத்தேன் ?"

இருவரும் பீரோவைப் புரட்டிப் பார்த்தார்கள். மேஜை டிராயர், புத்தக ஷெல்ப், சமையல் அறை அலமாரி, வலை பீரோ.... ஓர் இடம் பாக்கி இல்லை. ஊஹூம்... வைரத் தோட்டைக் காணவில்லை.

"மேஜையின் மேல் வைத்துவிட்டுப் போனதாக ஞாபகம்" என்றாள் கஸ்தூரி மெதுவாக.

"என்னிடம் கொடுக்க வேண்டியதுதானே நீ? எப்படி மேஜையில் வைக்கலாம்?" என்று கேட்ட கணவன் "நம் போறாத காலம். நம்முடையதென்றால் கவலைப்படுவதோடு விட்டு விடலாம். இரவல் ஆயிற்றே! எப்படி நாம் திருப்பிக் கொடுப்பது?" என்றான் வேதனையுடன்.

"யாரிடம் வாங்கினீர்கள்?" என்றாள்.

"அப்துல்லாதான் கொடுத்தான். அவன் மனைவியுடையது. சிங்கப்பூர் போயிருக்கிறாளாம், அப்பா அம்மாவைப் பார்க்க. வர ஆறு மாதங்கள் ஆகுமாம். 'நல்லவேளை, இந்த ஜோடியை இங்கே வைத்து விட்டுப் போயிருக்கிறாள்' என்று கூறிக் கேட்டதும் தூக்கிக் கொடுத்து விட்டான் அப்துல்லா" என்றான்.

பளிச்சென்று யோசனை வந்தது கஸ்தூரிக்கு. "என்ன சொன்னீர்கள்? அவர் மனைவி வர ஆறு மாதங்கள் ஆகுமா? அது வரை தோடு அவனுக்குத் தேவை இல்லையே? அவர் மனைவி வந்ததும் தருகிறேன் என்றால் சம்மதிப்பாரா?" என்று கேட்டாள்.

"அநேகமாகக் கேட்பான் என்றே நினைக்கிறேன். இதைப் போல் நாலைந்து வைரத் தோடுகள் இருக்கின்றன, அவனிடம். மேலும் என்னிடமும் நல்ல நம்பிக்கை அவனுக்கு. நானும் அவனும் ஸ்கூலில் ஒன்றாகத்தானே படித்தோம்? அப்போதே அவனுடைய அயல் நாட்டுக் கடிகாரம், பேனா எல்லாவற்றையும் என்னிடம்தான் கொடுத்துப் பத்திரமாக வைத்துக் கொள்ளச் சொல்வான்" என்றான் கல்யாணம்.

'பின்னே என்ன? ஆறு மாதங்கள் நம்மிடமே வைரத்தோடு இருக்கட்டும் என்று சொல்லுங்கள். சம்மதித்துவிடுவார் உங்கள் நண்பர்" என்றாள் கஸ்தூரி நிம்மதியாக.

கல்யாணத்துக்கு எரிச்சலாக இருந்தது. அவள் பேச்சு. "ஆறு மாதங்கள் கழித்துத் திருப்பிக் கொடுக்கணுமே. எங்கே இருக்கு? அப்போ மட்டும் திமீர்னு வந்து குதிக்குமா?" என்று கேட்டான் கோபத்துடன்.

"குதிக்கிறதா இல்லையா என்று பாருங்களேன். ஆனால் அதற்கு உங்கள் ஒத்துழைப்பு பரிபூர்ணமாக வேண்டும்" என்று புதிர் போட்டாள் கஸ்தூரி.

"புரியும்படி சொல்லு" என்று பொறுமையின்றிக் கேட்டான் கல்யாணம்.

"இதோ பாருங்கள். உங்கள் சம்பளம் இந்த மாதத்திலிருந்து எண்ணூறாக ஏறியிருக்கிறதல்லவா? அதிலே ஐந்நூறை என் பெயரில் பேங்கில் போடுங்கள். மிச்சம் முந்நூறில்தான் குடித்தனம் செய்ய வேண்டும்."

"ஐயையோ! அதெப்படி முடியும்?" என்று பதறினான் அவன்.

"வேறே வழி?" என்று கேட்ட கஸ்தூரி, பேப்பரும் பென்சிலுமாக உட்கார்ந்து சிக்கனப் பட்டியல் தயாரித்துக் கல்யாணத்திடம் நீட்டினாள். சினிமா, ஹோட்டல், நண்பர்களுடன் உல்லாசப் பயணம், புதுத் துணிமணிவாங்குவது எல்லாமே பட்ஜட்டிலிருந்து அடி பட்டிருந்தன. பல்லைக் கடித்தான் கல்யாணம்.

ஆரம்பத்தில் தொல்லையாக இருந்தாலும் கல்யாணத்துக்கு இந்தச் சிக்கனக் குடித்தனம் நாளடைவில் பழகியே விட்டது. ஓட்டல் பக்கம் தலைவைத்தே படுக்கவில்லை.

ஆறு மாதங்கள் ஓடிவிட்டன. கஸ்தூரி சீமந்தம் ஆனகையோடு அம்பகரத்தூருக்குப் பிறந்தகத்துக்குப் போய்விட்டாள். வாராவாரம் வந்து பார்த்தான் கல்யாணம்.

அந்த முறை "கஸ்தூரி, உன் இஷ்டப்படி மூவாயிரம் சேர்ந்து விட்டது. காரைக்காலில் ஒரு செட்டியார் நகைக் கடையில் சொல்லி வைத்திருந்தேன். நல்ல ஜதை வந்திருக்கிறதாம். செட்டியார் சொன்னார். நீயும் வா. போய் வாங்கி வந்துவிடலாம். அப்துல்லாவின் மனைவியும் திரும்பி விட்டாளாம் சிங்கப்

## உங்கள் குடும்பத்திற்கு ஏற்றது மிகச்சிறந்ததே!




D.C.G.49 TM (R)

## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட் 10க்கு 7 பேர்களில் வாய் துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை சரித்திரத்திலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவிதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.
அதன் சிறந்தமிக்க பெப்பர்மின்ட் சுவையே தனி—
கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!
தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**

வெண்மையான பற்களையும் ஆரோக்கியமான ஈறுகளையும் தூய்மையான இனிய மூச்சையும் பெற்றிடவே **கால்கேட் டூத் பிரஷ்களை** உபயோகியுங்கள்! உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும் ஏற்றவாறு அமைய—16 ரகங்கள்.

பூரிலிருந்து. நேற்றே இலேசாக ஞாபகப் படுத்தி விட்டான்'' என்றான். ஒரு விநாடி யோசித்த சுந்தரி சட்டென்று உள்ளே போனாள். அம்மாவிடம் ஏதோ பொய்ச் சாக்கு சொல்லி அனுமதி வாங்கிக் கொண்டு அவனுடன் நகைக் கடைக்குப் புறப்பட்டாள்.

வைரத் தோட்டுக்கு விலை தீர்த்து 'செக்' எழுதிக் கொடுத்துவிட்டு டாக்ஸியில் ஏறினார்கள். டாக்ஸி திருநள்ளார் தெரு பக்கம் திரும்பும்போது ''கொஞ்சம் இரு டிரைவர்'' என்று தடுத்து நிறுத்திய சுந்தரி, ''நம்ம வீட்டுக்குப் போய்விட்டுப் பிறகு அம்பகரத்தூர் போகலாமே?'' என்றாள் கல்யாணத்திடம்.

கல்யாணம் சரியென்று தலையாட்டினான். டாக்ஸி நேராகப் போய் மார்க்கெட் தெருவில் திரும்பி அவர்கள் வீட்டெதிரே நின்றது.

கல்யாணம் பூட்டைத் திறந்தான். சுந்தரி சுவாமி படத்தின் முன் விளக்கேற்றினாள். காதிலிருந்த ஸ்டட்டைக் கழற்றிவிட்டு, புதிய வைரத் தோட்டை அணிந்து கொண்டு சுவாமிக்கும் கல்யாணத்துக்கும் நமஸ்காரம் செய்து, ''ஆசீர்வாதம் பண்ணுங்களேன்'' என்றாள்.

கல்யாணத்துக்கு எல்லாம் புதிராக இருந்தது. ''சுந்தரி! வைரத் தோடு உனக்கு அழகாகத்தான் இருக்கிறது. இதுவே உனக்குன்னு வாங்கியிருந்தால் மேலும் மேலும் நகை சேரணும்னு ஆசீர்வாதம் பண்ணுவேன். ஆனால் இது அப்துல்லாகிட்டே திருப்பிக் கொடுக்க வாங்கினதாச்சே'' என்றான் வேதனையுடன்.

''இது உங்க சம்பாத்தியத்திலே மிச்சம் பிடிச்சு வாங்கினதாலே எனக்கேதான் சொந்தம். உங்க ஸேட்ஜிதருக்கு அவர் கொடுத்த தோட்டையே திருப்பிக் கொடுத்துடுங்க!'' என்றாள் சுந்தரி புன்னகையுடன்.

''அதுதான் தொலைஞ்சு போச்சே!'' திகைத்தான் கல்யாணம்.

சுந்தரி நிதானமாக எழுந்து, ''இப்படி வாருங்கள்'' என்று அழைத்துப் போய் ஸ்டீல் பீரோவைத் திறந்தாள். மேல் தட்டில் அதே வெல்வெட் பெட்டியில் ஒளி உமிழும் வைரத் தோடுகள்.

''எப்போ அகப்பட்டது சுந்தரி?''

''தொலைந்து போனால்தானே அகப்பட? புரியும்படி சொல்கிறேன். அன்றைக்குக் கோபு வந்து கூப்பிட்டானே, அப்போது இந்தத் தோடு என் கையில்தான் இருந்தது. அப்போது இருந்த பரபரப்பில் அப்படியே ஆஸ்பத்திரிக்குப் போய் விட்டேன். அம்மா தான் பார்த்துவிட்டு, 'ஏதுடி, வைரத் தோடு?' என்று கேட்டதும்தான் கையில் வெல்வெட் பெட்டி இருப்பதே நினைவுக்கு வந்தது. இரவல் என்று சொல்ல வெட்கப் பட்டுக் கொண்டு, 'உன் மாப்பிள்ளைதான் வாங்கியிருக்கார். உன்னிடம் காட்ட எடுத்து வந்தேன்' என்று சொல்லிச் சமாளித்தேன். அம்மாவுக்குக் கொள்ளைச் சந்தோஷம், ஊதாரி மாப்பிள்ளைகூடப் பொறுப்பாக மனைவிக்கு நகை வாங்குகிறாரே என்று. 'நீ நல்லவிதமாகப் பெற்றுப் பிழைத்தாயானால், உன் அப்பாவிடம் சொல்லி வைர பேசரியும் வாங்கிப் போடச் சொல்கிறேன்' என்றாள். எனக்கு மனம் நெகிழ்ந்து விட்டது. அப்போதே தீர்மானம் செய்து விட்டேன், எப்படியும் வைரத் தோடு வாங்கி விட வேண்டும் என்று. எனக்கு என்று சொன்னால் இத்தனை அக்கறையுடன் நீங்கள் பணம் சேர்ப்பீர்களா? எத்தனையோ முறைதான் கேட்டு அலுத்து விட்டேனே. எனவேதான் இரவல் தோடு காணாமல் போய்விட்டதென்று நாடகம் ஆடினேன். அதனால்தான் வைரத் தோடு கிடைத்தது எனக்கு. என் நல்ல காலம், இது வரையில் நீங்கள் பீரோவில் என் நகைப் பெட்டியைத் திறந்து பார்க்கவில்லை'' என்று கூறி நிறுத்தினாள்.

கல்யாணம் ஒன்றும் பேசாமல் அவளை உறுத்துப் பார்த்துக் கொண்டேயிருந்தான்.

''ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள்? உங்களை ஏமாற்றி வைரத் தோடு வாங்கிவிட்டேனே என்று கோபமா?'' என்று இலேசான பயத்துடன் கேட்டாள் சுந்தரி.

''சே! சே!'' என்றான் கல்யாணம். ''இப்படி ஒரு சமர்த்து மனைவி இருந்துட்டாப் போதுமே. வைரச் சுரங்கத்தையே நான் வாங்கிட மாட்டேனா?'' என்று ஆசையுடன் அவள் கன்னத்தைத் தட்டினான்.

## காஞ்சிப் பெரியவர்களின் கல்கத்தா விஜயம்



உலகம் உய்ய அவதரித்த ஆதி சங்கர பகவத்பாதர் பாரதம் முழுவதும் கால்நடையாகப் பிரயாணம் செய்து அத்வைத தத்துவத்தைப் பரப்பினார்கள். அவருடைய வழி வழி வந்த பரம்பரையில் இன்று நாம் கண்ணாரக் கண்டு வழிபட நடமாடும் தெய்வமாக நமக்கு அருள் பாலித்து வரும் காஞ்சி முனிவர் 1935ல் கல்கத்தாவுக்கு வருகை தந்து அருள் பாலித்தார்கள்.

காஞ்சி பீடத்தை அலங்கரிக்கும் ஸ்ரீ ஜயேந்திரசரஸ்வதி அவர்கள் 12-10-74 அன்று கல்கத்தாவுக்கு விஜயம் செய்கிறார்கள். நவம்பர் மூன்றாம் தேதி வரை தங்கி வங்க மக்களுக்கு அருள் பாலிக்க இசைந்துள்ளார்கள். வங்கத்தில் தேசிய விழாவாகக் கொண்டாடப் பெறும் துர்க்கா பூஜையின்போது பெரியவர்கள் கல்கத்தா வருவது வங்க மக்களின் பாக்கியம். பெரியவர்களின் நவராத்திரி விசேஷ பூஜையுடன், சத சண்டி ஹோமம், கன்யா பூஜை, சுவாஸினி பூஜை வேதத்தின் பல் லின மாநாடு, ஷண்மத மகாநாடு ஆகியவையும் நடைபெற இருக்கின்றன. அனைவரும் இந்த நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு பெரியவர்களின் பரிபூரண அனுக்கிரகத்துக்குப் பாத்திரமாக வேண்டுகிறோம்.

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பநவீனமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அன்னியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

Sobhagya GR 74-2-Tam.

தபன் சின்ஹா வங்காள மொழியில் 'அதிதி', 'பாலிகா பதூ' போன்ற படங்களை எடுத்துப் புகழ் பெற்றவர்! இங்கு ஆச்சரியக் குறி எதற்கு என்றால், அவர் 'ஸகீனா' படம் எடுக்கக் கையாண்ட முறைக்காக.

சுதந்திரத்துக்கு முந்திய சூழ்நிலையில் ஆங்கிலேய முதலாளிகளிடம் இந்தியத் தொழிலாளிகள் பட்ட அல்லல்களைப் படம் எடுக்க முனைந்திருக்கிறார்! ஆனால், சுதந்திரத்துக்குப் பின் வங்காளம் நக்ஸலைட்டுகளிடம் சிக்கி அவதியுற்ற கதையைப் படமாக்கியிருக்கிறார்! ஏனெனில் சுதந்திரத்துக்கு முன், சுதந்திரத்துக்காகப் போராடிய பாரதத்தில், படத்தில் காட்டியது போல் தொழிற்சங்கங்கள் இயங்கியிருக்க முடியாது.

புகழ் மட்டும் போதாது. பணமும் வேண்டும் என்பதற்காக எடுக்கப்பட்ட இந்தப் படத்தின் கதாநாயகன் ஸகீனா மஹாதோ. படிக்காத மேதை; தொழிலாளர் நண்பன்; மனிதாபிமானம் மிக்கவன். இப்பாத்திரத்தை ஏற்றிருப்பவர் திலீப் குமார். தொழிற்சங்கத் தலைவர் அநுரோத் அவரோடு கூடிக் குடிகெடுக்க வந்த பாத்திரம்! ஸாய்ராபானுவோ கூடிக் குலவிப் பண வசூலுக்கு வழிசெய்ய வந்த பாத்திரம்! தொழிற்சங்கத்தில் சொந்தம் கொண்டாடி வந்த கண்ணாடிப் பாத்திரம் அபர்ணா சென்!

படத்தில் பெரும் பகுதியை நிறைத்துத் தம் நடிப்பால் உயர முயல்பவர் திலீப்குமார்.

வசனம் எழுதிய ராஹீ மாஸூம் ரஜா, கொச்சை மொழி வசனம் தந்த பண்டித ராமமூர்த்தி சதுர்வேதி இருவரும் தங்களது சிறப்பான வசனங்களால், டைரக்டர் தபன் சின்ஹாவின் வேலையைக் குறைத்து விட்டார்கள்!* 'ஸகீனா' படம் பேசிப் பேசித் தள்ளுகிறது. அத்துடன் எஸ்.டி. பர்மனின் இசை அமைப்பு, பிமல் முகர்ஜியின் காமிரா எல்லாமாகச் சேர்ந்து இயக்குனப் புகழ்பெற்ற தபன் சின்ஹாவை விழுங்கி விட்டன!

## ஸகீனா





## துனியா கா மேலா

புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக்கொண்ட கதையாக, ஏதோ ஒரு படம் எப்படியோ வெற்றி கண்டது என்பதற்காக ஆட்டு மந்தையாகச் சாயும் சுபாவம் படைத்த இந்தச் சினிமாச் சந்தையிலே, எங்கேயோ குழந்தைகளைப் பிரித்து விட்டு, எப்படியோ மூன்று மணி நேரம் கதை பண்ணி விட்டுக் கடைசியில் சேர்த்து வைத்து மங்களம் பாடுவது என்பது புதிதல்ல.

ரேகா, சஞ்சய், மகமூது, ஜீவன், அஜித் என்று நடிகர்களை மாற்றியிருக்கிறார்களே ஒழியக் கதையை மாற்றவில்லை; அடி - தடியைக் குறைக்கவில்லை. இதுபோன்ற பாத்திரங்களில் நடித்து நடித்து அலுத்துப் போன நடிகர்களும் எப்படி நடித்தால் என்ன என்று தங்கள் நடிப்புக் கலையைப் பல ஆண்டுகளுக்குப் பின் தள்ளியிருக்கிறார்கள். இசைகூடத் தன் பங்கைச் சரியாகச் செய்திருக்கிறது சந்தை இரைச்சலாக! 'துனியா கா மேலா' அல்லவா? காதை மட்டும் பொத்திக் கொள்ளவாவது, கண்ணையும் பொத்திக் கொள்ளுங்கள்! —ரா. வீ.

வாழ்க்கையில் சந்தோஷமளிக்கும் பல தருணங்கள் ஏற்படுகின்றன

# தலைவலி உங்கள் சந்தோஷத்தை கெடுக்க விடாதீர்கள்

## 2 ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்






மைக்ரொட்பைன் ஆஸ்ப்ரோ வலியை அதிவேகமாக வெளியே இழுத்து விடுகிறது

A.G.62 TM




# தீராத பிரச்னை

பி. வி. ஆர்.

அண்மையில் ஒரு கல்யாணத்துக்குப் போயிருந்தேன். மணமகனுக்கு வயது முப்பத்தெட்டு அல்லது முப்பத்தொன்பது இருக்கும். மணப்பெண் அவனைவிட நான்கு வயது சிறியவள். அவனுடைய தகப்பனாரை எனக்குத் தெரியும். செம்புதாஸ் தெருவில் ஓர் இரும்புக் கடையில் நாற்பது வருடங்களாகக் கணக்கு எழுதி வருகிறார். கல்யாணத்தை மிகவும் சிரமப்பட்டு ஏற்பாடு செய்து நடத்தி விட்டார்.

ஆனால் இத்துடன் அவருடைய பிரச்னையோ தொல்லையோ தீரவில்லை. முதல் பெண்ணின் கல்யாணம்தான் முடிந்திருக்கிறது. இருபத்தொன்பது வயதில் ஒரு பெண் — கார்ப்பரேஷன் பள்ளிக்கூட ஆசிரியை. இருபத்தாறு வயதில் மூன்றாவது பெண் — டெலிபோன் ஆபரேட்டர். இருபத்திநாலு வயதில் ஒரு பெண் — சங்கீதம் சொல்லிக் கொடுக்கிறாள். இந்த மூன்று பெண்களையும் அவர் கரை சேர்த்தாக வேண்டும். இவர்களும் அவருமாக மொத்தம் ஆயிரம் ரூபாய் வரையில் சம்பாதிக்கிறார்கள். ஆனால் அந்த ஆயிரத்தில் ஒரு ஐந்து ரூபாய் கூட அடுத்த மாதம் முதல் தேதி வரை நிற்பதில்லை.

காலா காலத்தில் பெண்களைக் கல்யாணம் செய்து கொடுக்க முடியாமலிருப்பது நம் சமூகத்தின் சாபக்கேடு. முன்பெல்லாம் பெண்ணைக் கல்யாணம் செய்துகொடுத்து அழித்தான் என்று சரித்திரம் பேசவில்லை.

இப்போது? நடுத்தர வகுப்பினரும் சரி, அவர்களைவிட ஒருபடி கீழே இருப்பவர்களும் சரி, பெற்ற பெண்களைப் பற்றிக் கவலைப்பட்டுப் பயனில்லை என்று இருந்து விடுகிறார்கள்.

பெண் பதினைந்து வயதில் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்கிறது. அப்புறம் பி. யூ. ஸி.க்குப் போகிறது. அது இரண்டுங்கெட்டான் படிப்பு என்பதை உணர்ந்து, பி. ஏ., பி.எஸ்ஸி. என்று தாவுகிறது.

கல்யாணப் பிரச்னைகளிலிருந்து பெற்றோர்கள் தப்ப ஒரு நல்ல வழி கிடைத்து விடுகிறது. பிரச்னைகளிலிருந்து ஓடத்தான் அவர்கள் நினைக்கிறார்களே தவிர, பிரச்னையைத் தீர்க்க யோசனை செய்வதில்லை.

பி. ஏ. படித்து முடித்ததும் பெண்ணின் கல்யாணம் நடந்து விடுகிறதா? அவள் உத்தியோகத்துக்குப் போகிறாள். இப்போது அவளைப் பெற்றவர் ஒரு சங்கற்பம் செய்து கொள்ளுகிறார்: பெண் கொண்டு வருகிற முந்நூறு ரூபாயில் இருநூற்றைம்பதை மாதா மாதம் பாங்கியில் போட வேண்டியது. ஒரு வருஷத்தில் மூவாயிரம், இரண்டு வருஷங்களில் ஆறாயிரம். (வட்டியைத் தவிர) அவள் சம்பாதிக்கிற பணத்திலேயே அவளுக்குக் கல்யாணம் செய்து விடலாம்:

ஆனால் அவருடைய சங்கற்பம் இரண்டு மாதங்களிலேயே தான் தூளாகி விடுகிறது: திடீரென்று செலவுகள் முளைக்கின்றன. குடும்பத் தலைவர் ஓய்வுபெறுகிறார். அல்லது ஒருபையனை என்ஜினீயர் அல்லது டாக்டருக்குப் படிக்க வைக்கும்படியாகிறது. வீட்டுக்காரர் வாடகையை அதிகமாக்குகிறார். பால் விலை ஏறுகிறது. உத்தியோகம் பார்க்கச் செல்லும் பி.ஏ. படித்த பெண் கோடம்பாக்கம் நூல் புடவையிலோ சின்னாளப்பட்டுப் புடவையிலோ செல்லுவாளா? நைலான், நைலக்ஸ், டெபை டீ என்றெல்லாம் உடல் அலைகிறது. புடவை நிறத்துக்கு ஏற்ற செருப்புகள், ஹாண்ட் பாக், நெற்றிப் பொட்டு, காதணிகள் என்று புதுப் புதுச் செலவுகள். மொத்தத்தில் பெற்றவரால் பெண் கல்யாணத்தை அவளுக்குப் பதினைந்து பதினாறு வயது நடந்த போதும் செய்ய முடியவில்லை. இப்போது அவள் சம்பாதிக்கும் போதும் முடியவில்லை.






இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம், ஒரு பெண்ணின் கல்யாணத்துக்கு வேண்டிய பணம்தான். தவணை முறையில் யார் வரதட்சிணையை வாங்கிக் கொள்ள முன் வருகிறார்கள்? எதிர் ஜாமீன், பையனின் படிப்புக்கும் உத்தியோகத்துக்கும் ஏற்ப ஏறுகிறது. பத்துப் பவுன் நகை, ஆயிரம் ரூபாய்க்கு வெள்ளிப் பாத்திரம், ஆயிரத்துக்கு எவர்சில்வர், பையனின் டிரன்ஸுக்கு ஆயிரம் என்று ஆயிரம் ஆயிரமாகப் போகிறது.

வரதட்சிணை இல்லாமல், ஆர்ப்பாட்டம் இல்லாமல், ஆரவாரம் இல்லாமல் ஒரு தம்பதியின் அத்தியாவசியத் தேவைகளுக்கு மட்டுமே செலவு என்ற ஓர் உறுதியுடன் கல்யாணம் நடக்குமானால் அது பெண்ணின் பெற்றோருக்கு மட்டுமா பூரிப்பைக் கொடுக்கும்? வளர்கின்ற சமூகமே அல்லவா பூரித்துப் போகும்?



கொழும்பு வழக்கறிஞர் திரு ஆர். நமச்சிவாயம் அவர்களின் குமாரத்தி செல்வி சகுந்தலாவுக்கும், திரு எஸ். பி. ரகுநாதன் அவர்களின் குமாரன் செல்வன் ஸ்ரீஸ்கந்தாவுக்கும் வெள்ளவத்தை நியூ கதிரேசன் கோவில் ஹாலில், அண்மையில் திருமணம் அதிவிமரிசையாக நடந்தேறியது. நியூகதிரேசன் கோவில் ஹால், சமீபத்தில் ஆலய நிதியிலிருந்து ரூபாய் பத்து லட்சம் செலவில் அதன் டிரஸ்டிகளான செட்டிநாடு கார்ப்பரேஷனால் கட்டப்பட்டது. செல்வி சகுந்தலா - ஸ்ரீஸ்கந்தாவின் திருமணம் தான் இப் புதுக் கல்யாண மண்டபத்தில் நடந்த முதல் திருமணம். இத்திருமணத்துக்கு ஏராளமான உறவினர்களும், நண்பர்களும், பிரமுகர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.












## ராஜாஜி ஏனில்லை?

உயர்திரு இராஜகோபாலாச்சாரியார் அவர்களின் பெருமையை நான் சொல்லி யாரும் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை. உலகமே அறியும். உள்ளதை உள்ளபடி பின்வரும் சந்ததிகளுக்கு உணர்த்துவதற்காக எழுதப்படும் கலைக் களஞ்சியம் போன்ற நூலில் அவருக்குரிய இடத்தைக் கொடுக்க வேண்டாமா? இராஜாஜி இல்லாத தமிழ்க் கலைக் களஞ்சியமா?

மானாமதுரை
26-9-74 ஆர். ரஞ்சிதம்

இது குறித்துக் கலைக் களஞ்சியம் ஆசிரியர் திரு பெரியசாமி தூரன் அவர்களை விசாரித்தோம். "அறிஞர்கள், பெரியோர்களுள் காலமானவர்களைப் பற்றி மட்டுமே கலைக் களஞ்சியத்தில் எழுதுவது என்று ஒரு நியதி ஏற்படுத்திக் கொண்டிருந்தோம். தற்போது குழந்தைகள் கலைக் களஞ்சியத்தில் ராஜாஜி இடம் பெற்றிருக்கிறார். கலைக் களஞ்சியம் இரண்டாவது பதிப்பு தயாராகிறது. அப்போது ராஜாஜி நிச்சயம் இடம் பெறுவார்" என்கிறார். - ஆசிரியர்.

## காரணம் புரிந்ததாம்!

"மர்மச் சிறப்பிதழ்" அட்டைப் படம் ஒரே திகைப்பாயிருந்ததன் காரணம் பின்னர் புரிந்தது. படத்தைத் தலைகீழாகப் போட்டிருக்கிறீர்கள்!

திருப்பதிசாரம்
22-9-74 எம். சிவசுப்பிரமணியம்

## வருத்தமளித்த விளக்கம்

சில்வி அட்டைப் படத்தைப் பார்த்ததும் அதன் வண்ணங்களும், கோடுகளும் முதலில் கவனத்தை ஈர்த்தன. சிவப்பு நிறத் திட்டுக்கள் முன்னதாகக் கண்களைத் தாக்க, அதன் பின்னணியில் நீல நிறத்தை நடுநாயகமாகக் கொண்டு, மஞ்சள் பச்சை, வயலெட் போன்ற நிறங்கள் வெண்மை, கருமையோடு விரவி ஏதோ ஒருவகைச் சலனத்தை ஏற்படுத்தின. இரத்தம், நீர் போன்ற பொருள்களோடு சிந்தனை உறவாடலாயிற்று. வளைந்த கோடுகள் மேலேயிருந்து ஒன்றையொன்று குறுக்கிட்டுப் பார்வையைக் கீழ்நோக்கி வளைத்துப் படத்தின் மையத்தில் குவியச் செய்தன. நீர்த்திவலைகள் தெறிப்பது போல ஓர் உணர்வு ஏற்பட்டது. இனம் தெரியாத திகைப்பு உள்ளத்தில் எழுந்தது. மர்மச் சிறப்பிதழ் என்னும் தலைப்பு வேறு இத் திகைப்புக்கு வலுவூட்டும் தூண்டலாக அமைந்தது. நிறங்களும் கோடுகளும் தந்த இந்தக் கற்பனையோட்டமும், உணர்ச்சிப் பிரதிபலிப்பும், சிந்தனை வீச்சும் அட்டைப் பட விளக்கத்தைக் கண்டதும் குன்றிவிட்டன.

உங்கள் விளக்கம் மாடர்ன் ஆர்ட்டையே கேலி செய்வதுபோல் அமைந்துள்ளதே!

காந்தி கிராமம்
25-9-74 செ. ராமானுஜம்

## பர்மா பஜார்

பர்மா பஜாரில் 470 சிறிய கடைகள் உள்ளன. ஒவ்வொரு கடையையும் நம்பிப் பல ஏழை பர்மா அகதிகள் பிழைத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கடைகளில் ஒரு நாளைக்கு ரூபாய் ஐம்பதிலிருந்து நூறுவரை வியாபாரம் நடந்தாலே பெரிய காரியம். பர்மாபஜார் வியாபாரிகள் ஒரு காலத்தில் பர்மாவில் செல்வச் செழிப்போடு வாழ்ந்து இன்று வியாசர்பாடி, நேதாஜி நகர், ரெட்ஹில்ஸ் சர்மா நகர், பக்தவத்சலம் காலனி, எண்ணூர் ஆகிய பகுதிகளில் குடிசைகளில் அரைப் பட்டினியோடு வாழ்ந்து வரும் நிலையை அறிந்தால் எந்த அளவுக்கு இந்த வியாபாரம் லாபமும் வாழ்வும் தந்து வருகிறது என்பது அனைவருக்கும் புலனாகும்.

இந்நிலையில் சுங்க இலாகா அதிகாரிகள் வாரத்துக்கு மூன்றுமுறை விற்பனைப் பொருள்களைக் கண்காணிக்க வந்து இங்குள்ள நியாயமாக விற்பனை செய்ய உரிமையுள்ள பொருட்களைக்கூடப் பறிமுதல் செய்து விடுகிறார்கள். வியாபாரிகளின் ஏழைமை நிலை காரணமாக அப்படிப் பறிமுதல் செய்த பொருட்களைத் திரும்பப் பெற நீதிமன்றத்தில் வாதாட முடியாத நிலையில் உள்ளார்கள்.

நிலைமை இவ்வாறிருக்க, பர்மா பஜாரில் ஒரு நாளைக்குப் பல லட்சக் கணக்கில் வியாபாரம் நடப்பதாகவும், கள்ளக் கடத்தல் பொருள்கள் விற்பதாகவும் தற்போது அரசு கள்ளக் கடத்தல் சம்பந்தமாக எடுத்து வரும் நடவடிக்கைகளால் பஜாரே காலியாகிக் கொண்டிருப்பதாகவும் வரும் செய்திகள் நசித்துகொண்டிருக்கும் பர்மா தமிழர் வாழ்வில் மேலும் பேரிடியாக விழுகிறது.

சென்னை, எஸ்.கே.எம். யூசுப், தலைவர்
25-9-74 எஸ்.கே.இ. அலாவுதீன், செயலாளர், பர்மா தமிழர் மறுமலர்ச்சி சங்கம்.

## வியப்பளித்த விமரிசனம்

"ஜீஸஸ் வருவார்" விமரிசனம் படித்தேன். அது எனக்கு ஆச்சரியத்தை அளித்தது. 'மிகச் சிரமமான ஒரு விஷயத்தை எடுத்துக்கொண்டு மிக நாசூக்காக, மிக நுணுக்கத்துடன் விரச உணர்ச்சியே தோன்றாத அளவுக்கு எழுதியிருக்கிறீர்கள்' என்றும் 'ஜீஸஸ் வருவார் தமிழ் நாடக மேடையில் ஒரு மைல் கல்' என்றும் எனக்கு ரசிகர்களின் பாராட்டுக் கடிதங்கள் வந்திருக்கின்றன என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். பார்ப்பவர்களின் மனநிலையில் தோன்றும் உணர்ச்சிகளாவன அவரவருடைய தனிப்பட்ட வாழ்க்கை, மனப்போக்கு, கொள்கைப் பிடிப்பு இவற்றை அனுசரித்தே இருக்கும் என்ற கருத்துக்கு உங்கள் விமரிசனம் ஒரு சான்று.

சென்னை - 33
3-10-74 கோமல் சுவாமிநாதன்

# வளரும் குழந்தைகளுக்கு வாய்ப்பான துணை இன்க்ரிமின்*!

Incremin*
syrup

WITH IRON
TONIC APPETITE
STIMULANT

வளரும் பருவம்!

SISTA'S INC-4A TN

துள்ளித் திரியும் கன்றுப் பருவம். ததும்பி வழியும் சக்தி ...பொங்கிப் பெருகும் பூரிப்பான ஆரோக்கியம்! இதுதான் வளரும் பருவம். உடலும் உள்ளமும் ஓங்கி வளரும் இச் சமயத்தில் உங்கள் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் வழங்கி வாருங்கள். பலனளிக்கும் வைட்டமின்கள், இரும்புச்சத்து, அதி முக்கிய அமினோ அமிலம், வளரும் பருவத்தில் அத்தியாவசிய மான இவை அனைத்தும் அடங்கியது இன்க்ரிமின் டானிக்.

டாக்டர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்

Lederle

சயனமைட் இந்தியா லிமிடெட்டின் ஒரு பிரிவு
*அமெரிக்கன் சயனமைட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

# இன்க்ரிமின் டானிக் வளரும் பருவத்தினருக்கு ஒரு வரப்பிரசாதம்

# திருடர்கள்

ரா.சு.நல்லபெருமாள்

## 14. பெண் மனம்



கருணாகரன் ஆஸ்பத்திரியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார். மத்தியானம் விபத்தில் அடிபட்ட பையனின் நிலையை நேரில் காண வேண்டும் என்னும் ஆவல். பையன் உயிரை விட்டுவிடாமல் கையும் காலும் விளங்காதவனாக மட்டும் ஆகிவிடுவானேயானால், கருணாகரனுக்கு நல்ல லாபம் கிடைக்க வழி இருக்கிறது. எவ்வளவு லாபம் கிடைக்கும் என்பது பற்றிய கணக்கைச் சிந்தித்தபடியே காரைச் செலுத்திக் கொண்டிருந்தார்.

தெருக்களில் ஏற்படும் கார் விபத்து, சிலருக்கு நல்ல வருவாயை அளிக்கின்றன. விபத்து நடைபெறாதா என்று ஏங்கித் தவித்தவாறு, தெருக்களில் நடைபெறும் விபத்துக்களைத் தேடிச் சில வழக்கறிஞர்கள் அலைந்து கொண்டிருப்பார்கள். அப்படி விபத்துக்களைத் தேடித் திரியும் வக்கீல்களை ஆங்கிலத்தில், "ஆக்ஸிடெண்ட் பிக்கர்ஸ்" என்று கூறுவதுண்டு. அவர்களில் கருணாகரனும் ஒருவர். இது ஒரு நல்ல வியாபாரம். மாதத்துக்கு ஒரு விபத்துக் கிடைத்தாலே போதும். அதிலேயே ஆயிரம் ரூபாய்க்குக் குறையாமல் வருமானம் கிடைத்துவிட வழி உண்டு.

கார், லாரி, பஸ் முதலியவை கட்டாயமாக இன்ஷ்யூர் செய்யப்பட்டிருக்கும். ஏதாவது ஒரு விபத்தைக் காரோ அல்லது லாரியோ ஏற்படுத்திவிட்டால், அந்த விபத்தில் அடிபட்டுவிடும் நபருக்கு நஷ்டஈடு கொடுக்க வேண்டிய பொறுப்பு இன்ஷூரன்ஸ் கம்பெனியைச் சேர்ந்தது. விபத்தில் அடிபட்டுவிட்ட நபர், விபத்துக்குக் காரணமான காரின் சொந்தக்காரர் மீதும், அந்தக் காரை இன்ஷூர் செய்த கம்பெனி மீதும் நஷ்டஈடு கோரி நீதிமன்றத்தில் வழக்குத் தொடரலாம். நீதிமன்றம், விபத்துக்குள்ளான நபரின் அந்தஸ்து, தொழில், வருமானம், விபத்தினால் அவருடைய உடலுக்கு ஏற்பட்ட துன்பங்கள் ஆகியவைகளைப் பொறுத்து எவ்வளவு நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்பதை நிர்ணயித்துத் தீர்ப்புக் கூறும். இந்த விவரங்களைத் தெரிந்தவர்கள் நஷ்டஈட்டுக்காக வழக்குப் போட ஒரு வக்கீலைத் தாங்களாகவே அமர்த்திக் கொள்வார்கள். ஆனால் விவரம் தெரியாத பட்டிக்காட்டு ஆசாமியாயிருந்தால், வக்கீலுக்கு நல்ல யோகம். இது ஒரு நல்ல வியாபாரமாதலால், தெருவில் எங்கேயாவது விபத்து நடந்து விட்டது என்று தெரிந்தால் உடனே பல வக்கீல்கள் விபத்துக்குள்ளானவர்களையோ அல்லது அவரைச் சேர்ந்தவர்களையோ சந்திக்கப் போட்டி போட்டுக் கொண்டு ஓடுவார்கள். அந்தப் பந்தயத்தில் யார் முதலில் போய் ஆளைச் சந்திக்கிறாரோ, அவருக்குத்தான் வெற்றி. அந்த மாதிரியான வழக்குகளைக் கொண்டு வர, புரோக்கர்களும் உண்டு. வக்கீலுக்குக் கிடைக்கும் லாபத்தில் பத்து சதவீதம் புரோக்கர் பெற்றுக் கொள்வார்: மற்ற வழக்குகளைவிட விபத்து வழக்குகளில் தான் புரோக்கர்களுக்குக் கமிஷன் அதிகம். 'விபத்துக் காக்கும்' வக்கீல் ஒவ்வொருவரும் இதற்காக ஒன்றிரண்டு புரோக்கர்களை அமர்த்தியிருப்பார்கள்.

மத்தியானம் நடைபெற்ற விபத்தில் நல்ல வேளையாகப் புரோக்கர் யாரும் தலையிடவில்லை. விபத்து நடைபெற்ற இடத்துக்குச் சென்ற முதல் வக்கீல் கருணாகரன்தாம். ஆகையால் 'புரோக்கர் கமிஷன்' கொடுக்க வேண்டியதில்லை. வேறு வக்கீலும் போட்டிக்கு வரவில்லை. ஆகவே, கருணாகரன் மிகுந்த உற்சாகத்துடன் காணப்பட்டார்.

கருணாகரன் ஆஸ்பத்திரிக்குச் சென்றபோது விபத்துக்குள்ளான சிறுவன் படுக்கையில் மயங்கியே கிடந்தான். கட்டிலுக்குப் பக்கத்தில் அவனுடைய வயோதிகத் தந்தையும் தாயும் கவலையோடு அமர்ந்திருந்தனர். கிழவருக்குக் கருணாகரன் ஆறுதல் சொன்னார்.

"உயிருக்கு ஆபத்து ஒன்றுமில்லை. பயப்பட வேண்டாம். அதிர்ச்சியால் மயங்கிக் கிடக்கிறான். டாக்டரிடம் விவரமாகக் கேட்டு விட்டேன்" என்றார்.

"என்னமோ கடவுள்தான் காப்பாற்ற வேண்டும். எனக்கு இவன் ஒரே பிள்ளை" என்றார் கிழவர்.

கண்களில் கண்ணீர் முட்டி நின்றது.

"வேறு யாராவது வந்து பார்த்தார்களா?" என்று கருணாகரன் கேட்டார்.

"அந்தக் காரின் முதலாளி வந்து பார்த்தார்."

"என்ன? ஏதாவது பணம் கொடுத்தாரா?" பரபரப்புடன் கேட்டார் கருணாகரன்.

"கொடுக்க வந்தார். வாங்க மறுத்துவிட்டேன். என்ன செலவானாலும் தருவதாகச் சொன்னார். நீங்கள் மத்தியானமே என்னிடம் சொல்லியிருந்தீர்களே, அதனால் வாங்க மறுத்து விட்டேன்."

"நல்ல வேளை. இல்லையென்றால் ஏதோ கொஞ்சம் பணத்தை முதலில் கொடுத்து

விட்டுப் பிறகு ஏமாற்றிவிடுவார்கள். இன்ஷூரன்ஸ் கம்பெனியைச் சேர்ந்த யாராவது உங்களிடம் பேச வருவார்கள். சமாதானமாகப் போய்விடுவோம், கோர்ட்டுக்கெல்லாம் அலைய வேண்டாம் என்று சொல்லி ஏமாற்றப் பார்ப்பார்கள். திருட்டுப் பயல்கள். நீங்கள் ஏமாந்துவிடாதீர்கள். இந்த விஷயத்தை வக்கீலிடம் ஒப்படைத்து விட்டதாகச் சொல்லி விடுங்கள்.''

''கோர்ட் மூலமாகவா பணம் வாங்க வேண்டும்?''

''அதை நான் கவனித்துக் கொள்கிறேன். உங்களுக்கு எழுதப் படிக்கத் தெரியுமா?''

''எனக்கு என்ன தெரியும்? இந்தப் பயலாவது படித்து முன்னுக்கு வருவான் என்று நினைத்தேன். இப்படி ஆகிவிட்டது'' என்று கூறிய கிழவர், கட்டிலில் மயங்கிக் கிடந்த மகனைப் பார்த்துப் பெருமூச்சு விட்டார்.

''வழக்குப் போட்டு உங்களுக்கு இரண்டாயிரத்துக்குக் குறையாமல் வாங்கித் தருகிறேன்'' என்றார் கருணாகரன்.

கிழவர் வியப்பினால் வாயைப் பிளந்தார். ''இரண்டாயிரம் கொடுப்பார்களா?'' என்று மிகுந்த வியப்போடு கேட்டுவிட்டு, கருணாகரனை உற்றுப் பார்த்தார்.

கருணாகரன் மனத்திலேயே கணக்குப் போட்டுக் கொண்டிருந்தார்.

'பையனுக்கு ஏற்பட்டிருக்கும் விபத்தின் தன்மையைப் பார்த்தால் நிரந்தரமான ஊனம் ஏதாவது நிச்சயம் ஏற்பட்டுவிடும். டாக்டர் ராஜுகோபால்கூட அப்படித்தானே சொன்னார்? மேலும் கிழவருக்கு இவன் ஒரே மகன். இவனை நம்பித்தான் குடும்பமே இருக்கிறது. பத்தாயிரம் ரூபாய்க்கு வழக்குப் போட்டால், நிச்சயம் ஏழாயிரமாவது கொடுக்கும்படி தீர்ப்புக் கிடைக்கும். கிழவருக்கு இரண்டாயிரம்போகப் பாக்கி ஐயாயிரம் எனக்கு. கிழவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. கோர்ட்டில் எவ்வளவு ரூபாய்க்குத் தீர்ப்பாகியது என்பது தெரியவா போகிறது? நான் சொன்னதை நம்பி, சொன்ன இடத்தில் விரல் ரேகை போட்டுக் கொடுப்பார்....'

''என்னங்க, வக்கீலையா, இரண்டாயிரம் கட்டாயம் கொடுப்பார்களா?'' என்ற குரலைக் கேட்டுக் கருணாகரன் சுய நினைவை அடைந்தார்.

''ஓ.... நான் நிச்சயமாக வாங்கித் தருகிறேன்'' என்றார்.

''கோர்ட்டுக்குச் செலவாகுமே!'' என்றார் கிழவர்.



''நீங்கள் ஒரு பைசாக்கூடச் செலவழிக்க வேண்டாம். எல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன். உங்களைப் போன்ற ஏழைப் பாட்டாளிகளுக்கு உதவுவதுதான் என் கடமை. இல்லையென்றால் காரில் சுற்றும் முதலாளிகள் உங்களை ஏமாற்றி விடுவார்கள்.''

''ஐயாவுக்கு வக்கீல் பீஸ்....?'' என்று கிழவர் தயங்கினார்.

''அதைப் பற்றியெல்லாம் கவலைப்பட வேண்டாம். நான் கோர்ட்டில் ஜெயித்து இரண்டாயிரம் ரூபாய் வாங்கித் தருகிறேன். அதற்குப் பிறகு நீங்கள் எனக்குப் பீஸ் கொடுத்தால் போதும்.''

''ஐயா! உங்களைக் கடவுள்தான் எங்களிடம் அனுப்பி வைத்திருக்கிறார்....'' என்று கூறியபடியே கருணாகரனின் காலில் விழுந்து வணங்கினார் கிழவர்.

''பெரியவரெல்லாம் என் காலில் விழலாமா? தைரியமாயிருங்கள். அடிக்கடி நான் வந்து பார்த்துக் கொள்கிறேன். யாராவது எதிலாவது பணம் விஷயமாகக் கை எழுத்துப் போடச் சொன்னால் போட்டுவிடாதீர்கள்!'' என்றார் கருணாகரன்.

''எனக்குக் கையெழுத்துப் போடவே தெரியாது.''

''கையெழுத்து இல்லையென்றால் கைவிரல் ரேகையைப் பதிக்கச் சொல்வார்கள். யார் எது கேட்டாலும் வக்கீல் கருணாகரனிடம் கேட்டுக் கொள்ளும்படி சொல்லி விடுங்கள்'' என்று யோசனை கூறிவிட்டுக் கருணாகரன் தம்முடைய வீட்டை நோக்கி விரைந்தார்.



வீட்டில் அவருக்காக அவருடைய மனைவி மதுரம் காத்திருந்தாள். கருணாகரனைக் கண்டதும் உற்சாகத்துடன் வாசலுக்கு ஓடிவந்தாள்.

''ஏன் இவ்வளவு நேரம்?'' — அவளுடைய கேள்வியில் சிறிது கோபமும் தொனித்தது.

''நீ எங்கே புறப்பட்டிருக்கிறாய் ?''

''புத்தக வெளியீட்டு விழாவுக்குப் போக வேண்டாமா ?''

''நீயும் வரப் போகிறாயா?''

''பெண் எழுத்தாளருக்குப் பாராட்டு நடைபெறுகிறது. நான் வராமலா? சீக்கிரம் புறப்படுங்கள். இன்னும் அரை மணி நேரம் தான் இருக்கிறது'' என்றாள் மதுரம்.

அவளுடைய அழகும் அலங்காரமும் அவரை மயக்கின. அதே சமயம் அவருடைய மனத்தில் வலியும் எடுத்தது. அழைத்துக் கொண்டு போனால் விழாவுக்கு வந்திருப்பவர்களின் மனங்களை யெல்லாம் அவளுடைய உருவம் மயக்குமே என்ற எண்ணம் அவருக்கு வேதனையைக் கொடுத்தது. அந்த மாதிரியான ஒருவித மனோவியாதி அவரிடம் வெகு காலமாகவே இருந்து வந்திருக்கிறது. தம்முடைய எண்ணத்தைக் காட்டிக் கொள்ளாமல் சிரிப்பை வலிய வரவழைத்துக் கொண்டே புறப்படத் தயாரானார். கால் மணி நேரத்தில் தம்மை அலங்கரித்துக் கொண்டு வாசலுக்கு வந்தார். காரின் முன் பக்கத்தில் மதுரம் அமர்ந்து கொண்டாள். அவளுக்கு அருகில் இருந்தபடி காரைச் செலுத்தினார் கருணாகரன்.

அவளைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு காரில் செல்வதில் கருணாகரனுக்கு மகிழ்ச்சியும் உண்டு; வேதனையும் உண்டு. நல்ல உடற்கட்டுள்ள ஓர் இளம் பெண், தம்முடைய மனைவியாக இருக்கிறாள் என்பதைப் பலருக்குக் காட்டிக் கொள்வதில் அவருக்கு உள்ளூறப் பெருமை. அதே சமயம், தம்முடைய அவலட்சணத்தையும் அவளுடைய ஒய்யாரத்தையும் மற்றவர்கள் ஒப்பிட்டுப் பார்த்து ஏளனம் செய்கிறார்களோ என்னும் சந்தேக உணர்வு அவருடைய நெஞ்சை அரித்தது. தாம் எந்த வகையிலும் மதுரத்துக்குப் பொருத்தமானவர் அல்லர் என்பதை அவரே உணர்ந்திருந்தாலும், அவள் தமக்குச் சொந்தம் என்னும் உரிமை உணர்வால் சற்று உற்சாகம் அடைந்தார். எல்லாவற்றையும்விட மனத்தை மிகவும் பாதித்தது, மண வாழ்க்கையில் ஈடுபட அவர் லாயக்கற்றிருந்ததுதான். பள்ளியில் படித்துக் கொண்டிருந்த காலத்தில் சைக்கிளில் ஏற்பட்ட ஒரு விபத்தினால் அவருக்கு அந்த நிலை ஏற்பட்டு விட்டது.

ஊரில் யாரும் வம்பு பேசக் கூடாது என்பதற்காகத் திருமணம் செய்து கொண்டார். ஆனால் அவர் எதிர்பார்த்ததற்கு மாறாக வம்பு அதிகமாயிற்றே தவிரக் குறையவில்லை. அதிலிருந்துதான் அவருக்குச் சந்தேகம் என்னும் மன





நோயும் தோன்றிவிட்டது. அவருடைய இயலாத் தன்மை, மனைவியைச் சந்தேகிக்கும் கீழ்த்தரமான செயலுக்கு இழுத்துச் சென்றது.

மனைவியை எங்கும் தனியாக அனுப்பமாட்டார். யாருடனும் பேச அனுமதிக்கமாட்டார். வீட்டுச் சன்னல் வழியாக அவள் தெருவைப் பார்த்தால்கூட அவருக்குச் சந்தேகம் வந்துவிடும். இதற்காகவே காவலுக்கு ஓர் அல்சேஷன் நாயையும் வைத்தார்.

மதுரத்திடம் அவருடைய கெடுபிடிகள் செல்லவில்லை. அவள் எதிர்த்தாள். அவளுடைய பிடிவாத குணமும், தீயாகச் சுட்டு விடும் நாக்கும் கருணாகரனைத் திணற வைத்தன. ஓரளவு அவளுடைய போக்குப்படியே போக வேண்டியிருந்தது.

பாவம், மதுரம் ஓர் ஏழைக் குடும்பத்தில் பிறந்து வறுமையில் வாடிக் கொண்டிருந்தாள். அவளுடைய தந்தை புரட்சிக் கட்சியைச் சேர்ந்தவர். அப்போது அவள் பி. ஏ. படித்து முடித்துவிட்டு ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தாள்.... தொடர்ந்து படிக்கப் பண வசதி இல்லை. பண உதவி கேட்டு அவளுடைய தந்தை, கருணாகரனிடம் வந்த போதுதான் அவளைச் சந்தித்தார், கருணாகரன். மதுரம் தமக்கு மனைவி ஸ்தானத்தை ஏற்றுக் கொள்வதாயிருந்தால், அவளுடைய குடும்பம் முழுவதையும் காப்பாற்றுவதாகப் பேரம் பேசினார். மதுரத்தின் இரண்டு சகோதரிகளுக்குக் கல்யாணம் ஆக வேண்டியிருந்தது. இரண்டு சகோதரர்கள் கல்லூரியில் படிக்க வேண்டியிருந்தது. அந்தப் பேரத்துக்கு உடன்பட்டுக் கருணாகரனுக்கு மனைவியாக இருக்கச் சம்மதித்தாள் மதுரம். ஓர் இளம் பெண்ணினுடைய வாழ்வையும், சுகத்தையும் திருடுகிறோம் என்னும் உணர்வே இல்லாமல், அவளுக்குக் கணவராகி விட்டோம் என்ற பெருமையில் பூரித்துப் போனார் கருணாகரன்.

ஆசிரியர் பயிற்சி முடிந்ததும் மதுரம், உள்ளூரிலேயே ஒரு பள்ளியில் ஆசிரியையாக வேலைக்கு அமர்ந்தாள். அவளுக்கும் பொழுது போகவேண்டுமே என்பதற்காக வேலையில் சேர அனுமதித்தார், கருணாகரன். பள்ளியில் பணியாற்றிய இளம் ஆசிரியர்களோடு அவள் பழகவேண்டியிருந்ததைக் கண்டதும் மனம் துணுக்குற்றார். பல சமயங்களில் மதுரத்தைப் பார்க்கச் சில இளம் ஆசிரியர்கள் தம்முடைய வீட்டுக்கு வந்தபோதெல்லாம் கருணாகரனின் மனம் எரிமலையாகக் குமுறியது. அந்த வேதனையை அவரால் தாங்க முடியாமற் போகவே மதுரத்தை வேலையை ராஜிநாமா செய்யச் சொன்னார். முதலில் மதுரம் மறுத்தாள். ஆனால் கருணாகரனின் கோபம் வெடித்துச் சிதறியபோது அதிர்ந்து விட்டாள்.

''பள்ளிக்கூடத்தில் எந்த வாத்தியார்ப் பயலோடு பழகுவதற்காகப் போகிறாய்?'' என்று அவர் இரக்கமற்றுக் கேட்ட அன்றே மதுரம் வேலையை ராஜிநாமா செய்து விட்டாள்.

மதுரம் குமுறினாள். தன்னை அவர் மணந்ததே ஓர் அநீதியான செயல் என்று எண்ணியிருந்த அவளுக்கு அவருடைய மனத்தின் அசிங்கங்கள் தெரிய வந்தபோது, அதிர்ச்சிக்குள்ளானாள். சமுதாயத்தில் சோஷலிஸத்தைப் புகுத்தி மனித வர்க்கத்தின் மேம்பாட்டுக்குப் பாடுபடுவதாகக் கூறிக் கொண்டிருக்கும் புரட்சிக் கட்சியின் தலைவர், ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பணத் திமிரால் களவாடிவிட்ட அநீதியை அவளால் பொறுக்க முடியவில்லை. அவருடைய சந்தேகப் பார்வையும், வெளிவேஷமும் அவளுக்குக் கோபத்தையும் வெறுப்பையும் உண்டு பண்ணின.

பெண் மனம் பேயாவதோ, தெய்வமாவதோ ஆணைப் பொறுத்துத்தான். ஆண் கோயிலாக இருந்தால் பெண், தெய்வமாக ஒளி விடுவாள்; சுடுகாடாக மாறினால், பேயாகக் கோரத் தாண்டவமாடுவாள்.

மதுரத்தின் மனத்தில் பழி வாங்கும் எண்ணம் தீவிரமாகியது. அந்தச் சமயத்தில்தான் கருணாகரனிடம் ஜூனியராக வந்து சேர்ந்தான், சிங்காரம். ஆறடி உயரமும், பயில்வானைப் போன்ற பரந்த உடலும் பெற்றிருந்த அவன் கருணாகரனிடம் ஜூனியராக வந்து சேர்ந்ததன் காரணமே மதுரத்தின் அழகுதான். அவரிடம் ஜூனியராகச் சேர்ந்துவிட்டால் மதுரத்தை அடிக்கடி பார்க்கும் சந்தர்ப்பம் கிட்டும் என்ற ஆசை.

சிங்காரத்தின் உருவம் எவ்வளவு பெரிதோ அதற்கு நேர் எதிரிடையாக மூளை சிறிது. நினைத்ததை முடிக்க வேண்டும் என்ற அடாவடிப் புத்தி அவனுக்கு. எதையும் தீவிரமாகச் சிந்திக்க இயலாத மந்தமான மூளை.

கணவரின் ஜூனியர் என்ற முறையில் மதுரம் அவனோடு சகஜமாகப் பேசினாள், பழகி

# What do seven different tyre companies have in common?




That's it. Nircord - India's first nylon tyre cord.
Nircord is the super-strengthener for all better-grade tyres made in India today.

**nircord**®

® Regd. Trade Mark

**Nirlon Synthetic Fibres & Chemicals Ltd.**

Nirlon House, 254-B, Dr. Annie Besant Road, Bombay-400 025.

Interpub/NIR-C/46A/74

## நவராத்திரி நகைப்பு!



எம்.எல்.ஏ.: ஒவ்வொரு படியாக எட்டு படி எண்ணு பார்க்கலாம். ஒரு ரூபாய் தரேன்!

"உடல் ஊனமுற்றோர் மறுவாழ்வு நிதிக்காக உண்டியல் குலுக்கி சேர்த்த பணத்தை என்னசெய்வே?"
"கை கால் நல்ல இழந்த பொம்மைகளை ஒட்ட வைத்து மீண்டும் கொலுப்படியில் நிற்க வைப்பேன்!"





"எனக்குத் தொண்டை கட்டு. அதனுல் பாட்டு வாத்தியாரைப் பின்னுடி அழைத்து வந்தேன் மாமி!"

"ரேஷன் கார்டைக் காட்டினுல் தான் சுண்டல் தருவேன்!"



ளுள். கருணுகரனின் சந்தேகப் பார்வை தன் மீது விழட்டும் என்பதற்காகவே சிங்காரத்துடன் நெருங்கிப் பழகினுள். அப்படி ஒரு பழி வாங்கும் உணர்ச்சி அவளிடம் மேலிட்டு விட்டது. இதைக் கண்ட கருணுகரன், தம் அலுவலகத்தை வீட்டிலிருந்து வேறு ஒரு கட்டிடத்துக்கு மாற்றினுர். அதன் பிறகும் கருணுகரனின் வீட்டுக்குப் போகும் வாய்ப்பைச் சிங்காரம் ஏற்படுத்திக் கொண்டான்.

மதுரத்துக்குக் கதைகள் படிப்பதில் மிகுந்த ஆர்வம் உண்டு. சிங்காரம் தன்னை ஓர் இலக்கியவாதியாக அவளிடம் காட்டிக் கொள்ளப் பல புத்தகங்களை எப்போதும் தன் கைப்பையில் சுமந்து கொண்டு திரிவான். அவளுக்காக நூல் நிலையங்களிலிருந்து புத்தகங்களைக் கொண்டு வந்து கொடுப்பான். கதைப் புத்தகங்களைக் கொடுக்கும் சாக்கில் அவளைச் சந்திக்க அடிக்கடி சென்றுன். அந்தச் சமயங்களில் கருணுகரனே அவனை வாசலில் சந்தித்துப் புத்தகங்களைப் பெற்றுக் கொண்டு அனுப்பி விடுவார். சிங்காரம் மிகுந்த ஏமாற்றத்தோடு திரும்புவான்.

சிங்காரத்துடன் பேசிக் கொண்டிருப்பதில் மதுரத்துக்கு ரசனை இருந்தது. தன்னை ஒரு விமர்சகனுகக் காட்டிக் கொள்ள அவன் கையாளும் பாணி அவளுக்குப் பிரமிப்பூட்டும். கம்பூனிஸ நாட்டு நாவலாசிரியர்கள் சிலருடைய பெயர்களையும் மேலை நாட்டுத் தத்துவ ஞானிகள் சிலருடைய பெயர்களையும் அடிக்கடி சொல்லி, சில தத்துவ வார்த்தைகளையும் அவன் சொல்லும்போது மதுரத்துக்கு வியப்பாயிருக்கும். அவனைச் சிறந்த படிப்பாளி என்றே நம்பினுள். அவனை வீட்டுக்கு வர விடாமல் கருணுகரன் தடுத்தது அவளுடைய பழிவாங்கும் உணர்வை இன்னும் தூண்டியது. சிங்காரத்தைத் தம்முடைய வீட்டு வாசலில் கண்டபோதெல்லாம் கருணுகரன் பட்ட மனவேதனையைக் கண்டு மதுரம் ரசித்தாள். சில வேளைகளில் அவளே முந்திக்கொண்டு வாசலுக்கு வந்து சிங்காரத்தை வரவேற்று, புத்தகங்களை வாங்கிக் கொண்டபோது கருணுகரனின் கண்களில் தெரிந்த கலக்கத்தையும், குரோதத்தையும் கண்டு உள்ளூறச் சிரித்தாள்.

அன்று புத்தக வெளியீட்டு விழாவுக்கு மதுரமும் புறப்பட்டு விட்டதைக் கண்டு கருணுகரன் முதலில் முகத்தைச் சுளித்தார். ஆனுல் அவளுடைய பிடிவாதம் தளராது என்பதையும் புறப்படத் தயாராக இருப்பவளை இனித் தடுக்க முடியாது என்பதையும் அறிந்து கொண்டதால் வேறுவழி யின்றி அவளோடு புறப்பட்டார்.

வெளியீட்டு விழாப் பந்தலில் முன் வரிசையில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் அவர்கள் இருவரும் அமர்ந்தார்கள். சற்று நேரத்துக்குப் பிறகு குபீரென ஒருவித நெடி வீசவே கருணுகரன் பக்கவாட்டில் திரும்பிப் பார்த்தார். சிங்காரம் அவனுடைய இயல்பான அசட்டுச் சிரிப்பை உதிர்த்தபடி அவர்களை நெருங்கி வந்தான். மரியாதைக்காக மதுரத்தைப் பார்த்துக் கைகூப்பி வணங்கினுன். அவளும் சிரித்தபடியே பதிலுக்கு வணங்கினுள். கருணுகரன் கடைக்கண்ணுல் கவனித்தார்.

"நீங்கள் இங்கே வருவதாகச் சொல்லவில்லையே?" என்று கருணுகரனைப் பார்த்துக் கேட்டான் சிங்காரம்.

"திடீரென்று தான் புறப்பட்டோம். அந்தப் பௌடரைப் போடாமல் வரக் கூடாதா? நெடி மூக்கை அரிக்கிறது" என்று வெறுப்புடன் முகத்தைச் சுளித்தபடி சொல்லி விட்டுப் பந்தலில் வேறு எங்கோ பார்ப்பதாக பாவனை செய்தார், கருணுகரன். விரைவில் தம் முன்னுலிருந்து அவன் விலகிப் போய்விட வேண்டும் என்று விரும்பினுர்.

"உட்காருங்களேன்" என்று மதுரம் சிங்காரத்திடம் கூறியதைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினுர். அவள் சொன்னவுடனே அடுத்திருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டான் சிங்காரம். அதைக் கண்ட கருணுகரன் முள் மீது இருப்பவரைப் போல் பரிதவித்தார். அவருடைய பரிதவிப்பை ஓரக் கண்ணுல் கவனித்து உள்ளூறச் சிரித்துக் கொண்டிருந்தாள், மதுரம்.

(தொடரும்)




# உங்களுக்காக பிலிப்ஸ் வழங்கும் இந்த அபூர்வமான மியூஸிக் ஸிஸ்டம் பல அரிய சிறப்புகள் கொண்டது...



## இந்த பிலிப்ஸ் ஜீஎ:ப் 533 செய்து காட்டுவதை வேறெந்த ரெகார்டு பிளேயரும் செய்யமுடியாது.

**மெயின்ஸ்-பாட்டரி ஸிஸ்டம் ஜீஎ:ப் 533**



இதில் மோனோ இசைத்தட்டு ஒலி பிரமாதமாக இருக்கும்; ஸ்டீரியோ கூடத்தான். இது ஸ்டீரியோ கார்ட்ரிஜ் மற்றும் அவுட்புட் வசதி கொண்டது. இதை உங்கள் ரேடியோவுடன் இணைத்துப் பாருங்கள். என்ன ஆச்சரியம்! இதோ ஸ்டீரியோ தயார்.



ஸ்டீரியோவாகவும் மாற்றிக்கொள்ளலாம்

இதை நேரடியாக டேப்-ரெகார்டிங் செய்யவும், பதிவு செய்ததைத் திருப்பிக் கேட்கவும் பயன்படுத்தலாம். மோனோ, ஸ்டீரியோ, இரண்டுமே!

மெயின்ஸில் இயக்குங்கள்; அல்லது பாட்டரிகளில். மின்விசை நின்று விட்டால், இது தானாகவே பாட்டரிகளில் இயங்குகிறது.



இது எப்பொழுதும் ஒரு நிலையான வேகத்தில் இயங்குகிறது என்பதை நம்பலாம். இதை உறுதிப்படுத்துகிறது விசேஷ எலெக்ட்ரானிக் ஸ்பீட் 'கவர்னர்'

இசைத்தட்டின் ஒலி முடிந்ததும், இது தானாகவே நின்றுவிடுகிறது. இது மட்டுமா? இதில் வால்யூம் மற்றும் தொனிக் கட்டுப்பாடுகளும், வெவ்வேறு 3-ஸ்பீட்களும் உள்ளன.

இதை வீட்டிலும், வெளியிலும் இயக்கலாம். (இன்பமாகப் பொழுது போக்க, வசதியாக வெளியில் எடுத்துச் செல்லலாம் என்பதை எண்ணிப் பாருங்கள்!)

இதன் அழகிய தோற்றமே உங்களைக் கவர்ந்துவிடுமே! மரம், பொலிஸ்டைரீன் மற்றும் அலங்கார அலுமினியத்தில் அழகான அமைப்பு கொண்டது.

**இத்தனை சிறப்புகளும் கொண்ட பிலிப்ஸ் மெயின்ஸ்-பாட்டரி ஸிஸ்டம் ஜீஎ:ப் 533-ஐ, இவ்வளவு குறைந்த விலையில், பிலிப்ஸ் தொழில் நுட்பத் திறன் மட்டுமே உங்களுக்கு வழங்க முடியும்.**

இன்றே உங்கள் பிலிப்ஸ் வியாபாரியைக் காண்க.

# பிலிப்ஸ்

OBM 3464 TM

ஆபீஸிலிருந்து உள்ளே நுழையும்போதே, சோர்வாகக் காணப்பட்டான் சந்தானம்.

''ஏன், என்னவோ போலிருக்கிறீர்கள்? புதிய வேலையில் பொறுப்பு அதிகம். அப்படித்தானே?'' என்றபடி, அவன் கழற்றிக் கொடுத்த கோட்டை வாங்கிக்கொண்டு, அவன் கையில் காப்பித் தம்ளரைக்கொடுத்தபடி கேட்டாள் அம்புஜம்.

''பெரிய உத்தியோகத்துக்கு வந்துவிட்டு, பொறுப்பைப் பார்த்துப் பயப்படுவாளு எவனாவது? அதெல்லாம் ஒன்று மில்லை. அதிக வேலையை விடப் பெரிய வேதனை ஒன்று என் மனத்தைப் பாதிக்கிறது இப்போது'' என்று சொல்லிச் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டான்.

புதிய வேலையைப் பாதிக்கும்படியாய் ஏதாவது நடந்து விட்டிருக்கப் போகிறதே என்கிற பதைப்புடன், ''ஏன், என்ன சமாசாரம்?'' என்று கவலையுடன் கேட்டாள் அம்புஜம்.

''என்னத்தைச் சொல்வேன் அம்புஜம்? இன்னும் இரண்டு நாட்களில் நான் 'காம்ப்'புக்குக் கிளம்பிப் போய், பதினைந்து, இருபது நாட்களுக்குப் பிறகுதான் திரும்பி வருவேன். குழந்தைகளுக்கெல்லாம் இப்போது பரீட்சை சமயமாயிற்றே, நீ அவர்களின் படிப்பையும் கவனித்துக் கொண்டு, ஒண்டியாக வீட்டையும் நிர்வகிக்க வேண்டுமே என்பதை நினைக்கும் போதுதான்...''

தன்னையும் மீறிப் 'பக்'கென்று சிரித்துவிட்டாள் அம்புஜம்.

''ஏன்... ஏன் சிரிக்கிறே?'' என்று எதுவும்புரியாமல் கேட்டான் சந்தானம்.

# ஆணிவேர்



கஸ்தூரி பஞ்சு

''நீங்கள் கவலைப்படுவது நியாயம்தான் என்று நினைத்தேன். சிரிப்பு வந்து விட்டது.பாவம், நீங்கள் குழந்தைகளை யெல்லாம் உட்கார வைத்துப் பாடம் சொல்லிக் கொடுப்பதும், ஓயாமல் கடைக்குப் போய், வீட்டுக்கு வேண்டிய சாமான்களையும், காய்கறிகளையும் வாங்கி வருவதுமாக உங்களுக்குத்தான் வீட்டில் எத்தனை வேலை? அத்தனையையும் இருபது நாட்களுக்கு நானே கவனிக்க வேண்டுமென்றால், தவித்துத் திண்டாடித்தான் போய் விடுவேன்'' என்று அவள் பரிகாசமாகச் சொன்னதும், ''ஏய் கழுதே! கேலியா பண்ணறே?'' என்று கேட்டு அவள் கன்னத்தைத் தட்டினான் சந்தானம்.

''பின்னே என்ன, நிஜமாகத்தான் கேட்கிறேன். உங்கள் மூன்று குழந்தைகளும் எந்தெந்த வகுப்பில் படிக்கிறார்கள் என்பதை மட்டுமாவது 'கரெக்டா'கச் சொல்லி விடுங்கள், போதும். நான் உங்களைப் பரிகாசம் செய்தது தப்பு என்று கன்னத்தில் போட்டுக் கொண்டு தோப்புக்கரணம் போடுகிறேன்'' என்றாள் அம்புஜம்.

அவள் சொன்னதில் மிகை எதுவுமில்லைதான். வீட்டு விவகாரங்களுக்கும் அவனுக்கும் ரொம்பத் தூரம். அவன் சுபாவம் அந்த மாதிரி. வீட்டுக்குத் தேவையான பணத்தைக் தருவதைத் தவிர, மீதிப் பொறுப்பெல்லாம் அம்புஜத்தையே சார்ந்திருந்தது. அதுவும் குழந்தைகளின் படிப்பு விஷயத்தைப் பற்றி அக்ஷரம்கூட அவனுக்குத் தெரியாது. 'அட்மிஷனுக்கென்ன அத்தனை சிரமமா?' என்றுதான் கேட்பான். எப்போதாவது குழந்தைகள் அவனிடம் பாடப் புத்தகத்தை எடுத்துக் கொண்டு போய், ஏதாவது விளக்கம் கேட்டால், ''போடா, போ. உங்கம்மாவையே போய்க் கேளு'' என்று உள் பக்கமாகக் கையைக் காட்டி அனுப்பி விடுவான்.

ஆகவே, குழந்தைகளும் அதே ரீதியில் வளர்ந்தார்கள். ''அம்மா! நாளைக்கு நாங்கள் எல்லோரும் 'எக்ஸ்கர்ஷன்' போகிறோம். அப்பாவிடம் கேட்டு ஐந்து ரூபாய் வாங்கி வைத்து விடம்மா'' என்பான் பெரிய பிள்ளை.

''கணக்குநோட்டு தீர்ந்து போய் நாலு நாட்களாகின்றன. இன்னும் நீ அப்பாகிட்டே சொல்லவே

போட்டிக்கதை-9

யில்லையா?'' என்று முன்னறையில் சந்தானம் இருக்க, சமையலறைக்குள் வந்து அம்புஜத்தைச் சுற்றிச் சுற்றி வந்து நச்சரிப்பான் இரண்டாவது பிள்ளை.

''நீலப் பாவாடையும் வெள்ளைச் சொளியும் வேணும்னு எத்தனை தடவைம்மா கேட்பது? அப்பா ஆபீசுக்குப் புறப்படுவதற்கு முன் சீக்கிரமாகப் போய் அப்பாகிட்டே சொல்லேன்'' என்று அவள் முந்தானையைப் பிடித்துக்கொண்டு மூக்கைச் சிந்துவாள் மூன்றாவது பெண்.

இத்தனைக்கும் அவள் சந்தானத்துக்கு மகாசெல்லம். பத்து வயது நிரம்பும் தன் ஒரே அருமை மகளை, பத்து மாதத்துப் பச்சைக் குழந்தையாக நினைத்து, ஏகமாகக் கொஞ்சுவான் சந்தானம். அவள் எது கேட்டாலும் இல்லை என்று சொல்லாமல் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்து விட்டுத்தான் வேறு வேலை பார்ப்பான். ஆனால் அவளோ அத்தனையையும் வாங்கிக் கொண்டு, அவனிடம் எதுவும் நேராகக் கேட்காமல் அம்புஜத்திடம்தான் வந்து ஒண்டிக் கொள்வாள்.

''நான் என்ன உங்களுக்கெல்லாம் வக்கிலா? நீங்களெல்லாம் உங்க அப்பாகிட்டே பேசவே மாட்டீர்களா?'' என்று வேடிக்

கையாகக் கேட்பாள் அம்புஜம்.

''பார்த்தால் அப்படித்தான் தோன்றுகிறது'' என்று சொல்லிச் சிரிப்பான் சந்தானம்.

''நீங்கள் நடந்து கொள்வதில் அவர்கள் அப்படி நினைத்து விடுகிறார்கள்'' என்று சாடுவாள் அம்புஜம்.

ஒரு தடவை அம்புஜத்துக்குக் கொஞ்சம் காய்ச்சலும், உடம்பு ஒய்ச்சலுமாக இருந்த போது ஆபீஸுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த சந்தானத்திடம் பத்து ரூபாய் நோட்டைக் கொடுத்து, ''இன்று மத்தியானத்துக்குள் நம் பிரபுவுக்குப் பள்ளிக்கூடச் சம்பளம் கட்டியாக வேண்டும். இன்றுதான் கடைசி நாள். என்னால் போக முடியாது போலிருக்கிறது. மறக்காமல் கட்டிவிடுங்கள்'' என்று ஒரு தடவைக்கு நூறு தடவையாகச் சொல்லி அனுப்பினாள்.

சாயங்காலம் அவன் ஆபீஸிலிருந்து நுழையும் போதே, ''கட்டி விட்டீர்களா?'' என்று கேட்டுக் கொண்டுதான் வரவேற்றாள்.

''ஆமாம். உன் ஒருத்திக்குத்தான் பொறுப்பு. மற்றவனுக்கு ஒன்றுமே இல்லை என்று உனக்கு நினைப்பு. 'க்யூ'வில் நின்று கட்டிவிட்டு, ஒன்றரை மணி நேரம் 'லேட்'டாக ஆபீசுக்குப் போனேன், போதுமா?'' என்று சொன்னதும்தான் அவளுக்கு நிம்மதியாயிற்று.

இரண்டு நாட்களுக்குப் பிறகு, ஒரு மத்தியானம், ''அம்மா!.. அம்மா! எம்மா இன்னும் எனக்கு 'பீஸ்' கட்டலே? என் பெயரை அடிச்சுடுவேன்னு சொல்றாரு டீச்சர்'' என்று கண்ணைக் கசக்கிக் கொண்டே ஓடி வந்தான் பிரபு.

அம்புஜத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. சந்தானத்துக்கு மறதி உண்டே ஒழிய எதையும் மறைத்துப் பேசும் சுபாவம் இல்லை. இப்போது புதிதாக வந்து விட்டிருக்கிறதோ! 'வரட்டும்' என்று கறுவிக்கொண்டவள், அன்று மாலை அவன் உள்ளே நுழைந்ததும் நுழையாததுமாக 'மொலு மொலு' வென்று பிடித்துக் கொண்டாள்.

''என்ன, பீஸ் கட்டினவன் நான் இருக்கக் கட்டவில்லை என்று சொல்வதாவது?'' என்று கோபத்துடன் கூவிவிட்டு உள்ளே போனவன், மேஜை டிராயரை 'மடே'ரென்று இழுத்து, அதில் மடித்து வைத்திருந்த ரசீதை எடுத்து அம்புஜத்தின் முன்னால் தூக்கிப் போட்டான்.

அதைப் பிரித்துப் பார்த்த அம்புஜத்தின் விழிகள் ஒரு விநாடி வியப்பில் விரிய உடனேயே விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தாள்.

''ஏய் பைத்தியம்! எதுக்குச் சிரிக்கிறே? இப்போது சொல்லு, எந்த மடையன் சொன்னாலும் நான் 'பீஸ்' கட்டவில்லை என்று?'' என்றான்.

''சொன்னவன் மடையன் இல்லை. புத்திசாலிதான். கட்டினவர்தான்....'' என்று இழுத்தவள், ரசீதை அவன் முகத்துக்கு எதிராகப் பிடித்துக் கொண்டு, அதில் பையனின் பெயர் இருந்த இடத்தைச் சுட்டிக் காட்டி, ''வெட்கக் கேடு! பெற்றவருக்குப் பிள்ளையின் பெயர் தெரியவில்லை என்றால், கேட்பவர்கள் கைகொட்டித்தான் சிரிப்பார்கள். நீங்கள் பிரபுவுக்கு 'பீஸ்' கட்டிவிட்டு வந்திருக்கிறீர்கள். அவர்கள் ஸ்ரீராமுக்குச் சம்பளம் கேட்டு அனுப்பியிருக்கிறார்கள்'' என்று சொல்லி, மறுபடியும் சிரித்ததும், சந்தானத்தின் முகத்தில் விட்டர் விட்டராக அசடு வழிந்தது. பாவம் அவன்! வீட்டில் கூப்பிடும் பிரபு என்கிற பெயரிலேயே பணத்தைக் கட்டிவிட்டு வந்து விட்டான். பள்ளிக்கூடத்தில் பையனுக்கு ஸ்ரீராம் என்கிற பெயர் என்பது அவனுக்கு மறந்து விட்டது. என்றைக்காவது அவன் பள்ளிக்கூடம் போய், 'பீஸ்' கட்டுவதோ, இல்லை, பிள்ளைகளின் பாடப் புத்தகத்தைப் பிரித்துப் பார்ப்பதோ இருந்திருந்தால் அல்லவா அவனுக்கு அந்தப் பெயர் என்பது நினைவிருந்திருக்கும்? அதன் பிறகு ரொம்ப நாட்களுக்கு அந்த நிகழ்ச்சியைச் சொல்லிச் சொல்லிச் சந்தானத்தைக் கேலி செய்து கொண்டிருந்தாள் அம்புஜம்.

அப்படிப்பட்டவன் 'பிள்ளைகளின் பரீட்சை சமயத்தில் ஊருக்குப் போகிறேனே' என்று வருந்தினதும், அம்புஜம் சிரித்ததில் வியப்பு என்ன இருக்கிறது?

''எங்களைப் பற்றி அநாவசியமாகக் கவலைப்படாமல், உங்கள் வேலைகளைக் கவனியுங்கள். அதுபோதும்'' என்று 'காம்ப்' கிளம்பின கணவருக்கு விடை கொடுத்தாள்.

அன்று மாலை ஏழு மணிக்கு, உள் வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு, முன்னறைக்கு வந்து உட்கார்ந்த அம்புஜம், பெரிய பிள்ளை ஆங்கில நாவல் ஒன்றை வைத்துப் படித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து, ''என்னடா இது. பரீட்சை வந்துடுத்து. பாடத்தைப் படிக்காமல், நாவல் படிக்கிறாயே! எழுந்திருடா.



## கில்லாடிக்குக் கில்லாடி !



என் நண்பன் ஒருவன் ஓர் ஓட்டலுக்குச் சென்றிருந்தான். ''சூடா என்ன இருக்கு?'' என்று கேட்டதும் நன்கு பழக்கப்பட்ட அந்தச் சர்வர் ''சூடா நெருப்பு இருக்கு'' என்று பழைய ஜோக்கைத் தமாஷாகச் சொல்லியிருக்கிறார். உடனே இவன் ஒரு பிளேட் கொண்டு வரச் சொல்லி ஆர்டர் கொடுத்திருக்கிறான். சர்வரும் விட்டுக் கொடுக்காமல் ஒரு தட்டில் இரண்டு நெருப்புத் துண்டுகளை வைத்து எடுத்து வந்திருக்கிறார். என் நண்பன் நிதானமாகப் பாக்கெட்டில் கையை விட்டு ஒரு சிகரெட்டை எடுத்து அந்த நெருப்பில் கொளுத்திக் கொண்டு பேசாமல் எழுந்து வந்திருக்கிறான். அசந்து நின்ற அந்தச் சர்வர் முகத்தில் அசடு வழியாதிருக்குமா?

-ஏ.வி.

---

போய்ப் பாடப் புத்தகத்தை எடுத்துக் கொண்டு வா'' என்றாள்.

''என்னம்மா இது? அப்பாதான் ஊரிலே யில்லையே! இன்னைக்கும் எதற்காகத் தினம் மாதிரி ஏழு மணிக்குப் படிக்க வேண்டும்?'' என்றான்.

''அழகாயிருக்குடா. அப்படின்னு இத்தனை நாட்கள் உங்கப்பாவுக்காகத்தான் படிச்சியா நீ?'' என்று படபடப்புடன் கேட்டாள் அம்புஜம்.

''பின்னே யாருக்காகப் படிச்சேனாம்? பாடம் படிக்கா விட்டால் அப்பாவுக்குக் கோபம் வரும். விளக்கு வைத்த பிறகு வெளியில் இருந்தால் காலை ஒடித்து விடுவார் என்றதெல்லாம் எனக்குத் தெரியாதா? அந்தப் பயத்தில்தான் பதறிக்கொண்டு வீட்டுக்கு வருவதும், புத்தகத்தைப் படிப்பதுமாக இருந்தேன். அம்மா! ப்ளீஸ்! இன்னும் இருபது நாட்களுக்கு என் இஷ்டப்படி விட்டுவிடு. அனாவசியமாகத் தொந்தரவு செய்யாதே!'' என்று சொல்லிவிட்டு மீண்டும் நாவல் படிப்பதில் மூழ்கி விட்டான்.

அப்படியே விக்கித்துப் போய் உட்கார்ந்து விட்டாள் அம்புஜம். அவன் மட்டுமில்லை. அவனுக்கு அடுத்தவனும் அதே மாதிரிதான் நடந்து கொண்டான்.

ஞாயிற்றுக்கிழமை காலை பத்து மணிக்கு ''மாட்சுக்குப் போயிட்டு வரேம்மா'' என்று கிரிக்கெட் மட்டையுடன் அவன் கிளம்பினதும், ''என்னடா பிரபு, என்றைக்குமில்லாமல், இன்று மட்டும் மாட்ச!'' என்று அவள் கோபத்துடன் இரைந்ததும், ''அப்பாவுக்கு அதெல்லாம் பிடிக்காது. அதனால்தான் அந்தப் பேச்சைப் பற்றி மூச்சுக்கூட விடாமல் இருந்தேன். இன்றைக்குத்தான் அப்பா ஊரில் இல்லையேம்மா. போயிட்டு இரண்டு மூன்று மணிக்குத்தான் வருவேன்'' என்று சொன்னவன், அவள் பதிலுக்குக் கூடக் காத்திராமல், ஓடியே போய்விட்டான்.

அம்புஜத்தின் பெண், சந்தானம் கெஞ்சிக் கெஞ்சிக் கூப்பிட்டாலும் கூட அவனருகே போகாமல், முரண்டு செய்பவள், அவன் ஊருக்குப் போன மூன்றாவது நாள் காலையில் கண்விழித்து எழுந்திருக்கும்போதே, ''அம்மா! அப்பா ஊருக்குப் போய் எத்தனை நாட்களாயிடுத்து. அப்பாவைப் பார்க்காமல் எனக்கு என்னவோ போலிருக்கு. எப்போ வருவார் அப்பா?'' என்று கேட்டு அழவே ஆரம்பித்து விட்டாள்.

அம்புஜத்தின் உணர்வுகள் விழித்தெழுந்தன. அவள் உள்ளத்தில் மின்னலாக ஓர் ஒளி தோன்றி, அந்த வெளிச்சத்தில் மத்தாப்புப் பொறிகளாகப் பல உண்மைகள் புலப்பட்டன.

அறை முழுவதும் கவிந்து நிற்கும் கரிய இருளை, இருந்த இடத்திலிருந்து விரட்டியடிக்கும் சின்னஞ் சிறு விளக்கின் மகத்துவம் இப்போதுதான் அவளுக்குப் புரிந்தது.

ஓங்கி உயர்ந்து, கப்பும் கிளையுமாகப் பரவி நிற்கும் பிரும்மாண்டமான ஆலமரத்தை, விழாமல் பாதுகாப்பது, கண்ணுக்குத் தெரியாத அதன் ஆணி வேர்கள்தாம் என்பது இன்று தான் அவளுக்குத் தெரிந்தது.

பரீட்சை எல்லாம் முடிந்த பிறகு, 'பிராக்ரஸ் ரிப்போர்ட்'களில் கையெழுத்துப் போடுவதற்காக, அவற்றைப் பார்த்த சந்தானம், ''என்ன இது, ஏன் இந்தத் தடவை குழந்தைகள் இத்தனை குறைச்சலாக மார்க் வாங்கியிருக்கிறார்கள்?'' என்று கேட்டான்.

''நீங்கள் ஊரில் இல்லையல்லவா? அதுதான். இனிமேல் அவர்களின் பரீட்சை சமயத்தில் எங்கும் போகாதீர்கள்'' என்று அம்புஜம் சொன்னதைப் பரிகாசம் என்று நினைத்துக் கொண்டான் சந்தானம்.

ஒளிப் பிழம்புக்கு அதன் வெளிச்சம் எப்படித் தெரிய முடியும்?

உடுத்திவிட்டாலோ
உல்லாசப்பெருமிதம்

ஸெமி ஃபுல் வாயில்
புடவைகள்

# ப்ரீதி

கண்கவர் வண்ணங்களில்
உங்கள் மனதுக்குகந்த
டிசைன்களில் கிடைக்கிறது.
100% சுத்தமான எகிப்து பஞ்சு
கொண்டு நெய்யப்பட்டவை.



தி
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்

உயர்ந்த துணிகளின்
உன்னத சின்னம்

VSK.LMC-PRI.659.TM.

# பஜாஜ் லைட்டிங் போட்டி

## ரூ. 50,000 மதிப்புள்ள பரிசுகள் பெறுங்கள்.

இங்கே வெட்டுக

**நீங்கள் செய்யவேண்டியது:**

- கீழ்க்கண்ட ஆறு வாக்கியங்கள் சரியா தப்பா என்று தீர்மானித்து, பக்கத்திலுள்ள கட்டத்தில் இவ்வாறு ✓ குறி இடவும்.
- பஜாஜ் லைட்டிங் பற்றி 10 வார்த்தைகளுக்கு மேற்படாமல் ஆங்கிலம் அல்லது இந்தியில் மட்டுமே ஒரு விளம்பர வாக்கியம் (slogan) எழுதுக.
- முழு நுழைவுத் தாளை அனுப்பவேண்டிய முகவரி: 'பஜாஜ் லைட்டிங் போட்டி', தபால் பை எண் 10153, பம்பாய்-400 001.
- உங்கள் நுழைவுத் தாள் எங்களுக்குக் கிடைத்ததும், பஜாஜ் லைட்டிங் பொருட்களுக்கான 10% கழிவுக் கூப்பன் உங்களுக்கு அனுப்பப்படும்.

**நுழைவுக் கட்டணம் இல்லை**
பங்குபெறும் ஒவ்வொருவருக்கும் பஜாஜ் லைட்டிங் பொருட்களுக்கான 10% கழிவுக் கூப்பன்!

இங்கே வெட்டுக

| வாக்கியங்கள் | சரி | தப்பு |
|---|---|---|
| 1. நாளடைவில் ஃப்ளூரசென்ட் ட்யூபுகளைக் காட்டிலும் சாதாரண பல்புகளே அதிக சிக்கனமானவை. | | |
| 2. பஜாஜ் பல்புகளும் ஃப்ளூரசென்ட் ட்யூபுகளும் உலகின் சிறந்த லாம்புகளுக்கு ஈடானவை. | | |
| 3. 230V மெயின்ஸ் சப்ளையில் 230V பல்பு உபயோகித்தாலே அதிகபட்ச திறனைப் பெறலாம். | | |
| 4. பஜாஜ் நைட் லாம்பு ஒரு மணி நேரம் எரிந்தால் ஜீரோ பவர் செலவழிகிறது. | | |
| 5. உட்புறம் வெண் பூச்சு கொண்ட பஜாஜ் லாம்புக்கு 'மில்கி ஒயிட்' என்று பெயர். | | |
| 6. பஜாஜ், லைட்டிங் துறையில் மட்டுமே ஈடுபட்டுள்ளார்கள். | | |

**ஆங்கிலம் அல்லது இந்தியில் மட்டுமே விளம்பர வாக்கியம் எழுதுக**

---------------------------------------------

---------------------------------------------

கொட்டை எழுத்துக்களில் தெளிவாக எழுதுக:

பெயர் ---------------------------------------------

முகவரி ---------------------------------------------

---------------------------------------------

---------------------------------------------

ஆணு/பெண்ணு ---------------- வயது ----------------

**பரிசுகள்**

2 முதல் பரிசுகள்—பஜாஜ் ஸ்கூட்டர்
4 2-வது பரிசுகள்—பஜாஜ் குக்கிங் ரேஞ்ச்
20 3-வது பரிசுகள்—பஜாஜ் டீலக்ஸ் டேபிள் ஃபேன்
100 பரிவுப் பரிசுகள்—பஜாஜ் டீலக்ஸ் பிரெஷர் குக்கர் 5.5 லிட்.
600 பஜாஜ் நைட் லைட் லாம்புகள்—முதலில் கிடைத்த 600 நுழைவுத் தாள்களுக்கு

**விதிகள்**

- பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்டின் ஊழியர்கள், வியாபாரிகள், அவர்களது விளம்பர ஏஜென்டுகள் மற்றும் உறவினர்கள் நீங்கலாக இந்தியாவிலுள்ள அனைவரும் இப் போட்டியில் பங்கு பெறலாம்.
- ஒரு நபர் ஒரு நுழைவுத் தாள் மட்டுமே அனுப்ப உரிமை உண்டு.
- தபாலில் தவறிய, சேதமான அல்லது தாமதித்த நுழைவுத் தாள்களுக்கு நாம் பொறுப்பேற்க முடியாது.
- சிறந்த வாக்கியத்தைத் தேர்ந்தெடுப்பதில் நீதிபதிகள் தீர்ப்பே முடிவானது. அது பற்றி எவ்வித கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்பட மாட்டாது.
- வெற்றி பெற்றவர்கள் தபாலில் அறிவிக்கப்படுவர்.

**முடிவு தேதி: 31 அக்டோபர் 1974**

**பஜாஜ் -1938 முதல் ஒளித் துறையில் ஒப்பற்றவர்கள்**



# அக்கரைப் பச்சை

எப்படியோ ஆரம்பித்த படம் எப்படியோ முடிந்து விடுகிறது. ஓர் ஏழை எழுத்தாளனை விரும்பி, அவன் எழுத்தைப் பூசித்து வந்த ஒரு பெண் அவனையே மணந்து கொண்டு அதைப் பெறற்கரும் பாக்கியமாகக் கருதி வந்தவள், தங்கைக்குப் பணக்காரக் கணவன் கிடைத்ததும் அவனைக் கண்டு பொறாமைப்பட்டுக் கொண்ட கணவனையும், அவன் எழுத்தையும் தூற்ற ஆரம்பித்து விட்டாளாம்! அக்காளும் தங்கையும், வறுமையையும் வளத்தையும் மாற்றிக் கொள்கிறார்களாம்! இருவரும் கணவன்மார்களை வெறுத்துப் பிறந்த வீட்டுக்கு வந்து விடுகிறார்களாம்! அத்துடன் கதையை விடுங்கள்!

பாத்திரப் படைப்பில் கவனம் செலுத்தாத காரணத்தால், திரைக் கதை தற்கொலை செய்து கொண்டு விட்டது!

அக்காளாக வரும் லட்சுமி அற்புதமாக நடித்திருக்கிறார். கணவன் கதை சொல்லச் சொல்ல எழுதிக் கொண்டே வரும்பொழுது மனைவியின் முகத்தில்தான் எத்தனை மகிழ்ச்சி! எத்தனை நெகிழ்ச்சி! பிறகு கோபத்திலும், சோகத்திலும் எத்தகைய தத்ரூபமான நடிப்பு!

ஜெயசித்ராவின் 'கிளாமர் ரோல்' படத்தில் எடுப்பாகத்தான் இருக்கிறது. பிகவினால் நினைவாகவே இருக்கும் கணவனைத் தன் வழிக்குத் திருப்ப முடியாமல் பட்ட வேதனையில் ஜெயசித்ராவின் நடிப்பு சிறப்பாயிருக்கிறது.

பத்திரிகை நடத்துபவராக வரும் நாகேஷின் நடிப்பு அருமையானது. ஆனால், நடிப்பில் நல்ல அனுபவம் உள்ள அவர் ஏன் அப்படி இரைந்து பேசுகிறார்? பொதுக் கூட்டத்தில் பேசுவதாக நினைப்போ!

ஜெய்சங்கரின் துள்ளலும் துடிப்பும் மிக்க நடிப்பு படத்தின் சுவையான பகுதி. ரவிச்சந்திரன், எழுத்தாளக் கணவன். ஏன் சோர்ந்து போய் நடிக்கிறார் என்று தெரியவில்லை! அவரது வாளிப்பான உருவம், வளமான உடை, பாவனை எதிலுமே வறுமையைக் காணுமே!

படத்தின் கவர்ச்சிக்கு ராஜஸ்ரீ வந்து ரவிச்சந்திரனுடன் மிக நெருக்கமாக நடிக்கிறார்.

பேராசிரியர் ஏ. எஸ். பிரகாசம் வசனம் நன்றாக எழுதியிருக்கிறார். பல இடங்களில் பாராட்டுப் பெறுகிறது. ஆனால் கதை...? அது அக்கரைப் பச்சை! அவ்வளவுதான்.

அவலை நினைத்து கொண்டு உரலை இடித்திருக்கிறார்கள்!

# பாத பூஜை

தான் தாய் தந்தையற்ற அநாதை என்று தெரிந்து போனதும், மூத்தவள் இத்தனை காலமும் தன்னை வளர்த்து ஆளாக்கியவர்களிடம் சொல்லிக் கொள்ளக் கூடப் பிடிக்காமல் இரவோடு இரவாக, வீட்டை விட்டு வெளியேறி விடுகிறாளாம்! பொழுது விடிந்து பெற்றோர்கள் தன்னைத் தேடிக் கண்டு பிடிக்க வசதியாக வெகு சமீபத்தில் தான் போய்க் கொண்டிருக்கிறாள்! இதற்கு மேல் தான் அக்காளுக்கு வாழ்வளிக்கத் தங்கை செய்யும் தியாக வரலாறு ஆரம்பமாகிறது!



ஜெயா, ஜெயசித்ரா இருவருமே நன்றாய் நடிக்கின்றனர், என்றாலும், ஜெயசித்ரா ஏற்ற பாத்திரப் படைப்பின் வசதியால் உணர்ச்சி பொங்க நடிக்க முடிகிறது. துயரத்தில் பொங்கி ஜெயா நம் மனத்தை உருக்கினால், தியாகத்தில் நெகிழ்ந்து ஜெயசித்ரா நம்மை நெகிழ்விக்கிறார். இருவருக்குமே சபாஷ் போட்டு விட வேண்டியதுதான்!

சிவகுமார், ஜெயசித்ராவின் காதலன். கைகூடாமல் போன காதலினால் துயரத்தில் ஆழ்ந்தபோது அவர் நடிப்பு நன்கு சோபிக்கிறது.

வி. கே. ராமசாமி, நீலு, மனோரமா, 'அக்கசோ' சித்ரா ஆகியவர்கள் வந்து நகைச்சுவை விருந்தளிக்கின்றனர். ஆனால் நகைச்சுவைக்காகப் புனையப்பட்ட இணைக் கதையில் என்னத்தை யெல்லாமோ கலப்பு மணம், அது இது என்று சேர்த்துத் தொலைத்து விட்டார்கள். அதனால் அது கொஞ்சம் அசடு வழிந்திருக்கிறது!

மேஜர் சுந்தரராஜன் இல்லா விட்டால் "பாத பூஜை" இலேசில முடிந்திருக்காது. அவர் போடும் பைத்தியக்கார வேஷம் தான் திரைக்கதையின் கருவைத் தாங்கி நிற்கும் 'லேம்ப்பு லாக்கர்!' மேஜர் தம் பாகத்தைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

அனுபவம் முதிர்ந்த திரைப்பட டைரக்டர் ஏ. பீம்சிங் தம் பணியைச் சிறப்பாகச் செய்திருக்கிறார். பாவம், திரைக்கதையும் அவர் எழுதியதுதான்!

படத்துடன் தலைப்பைப் பொருத்த வேண்டும் என்பதற்காக, சும்மா சொல்லக் கூடாது! — அரும்பாடு பட்டிருக்கிறார்கள்!

— காந்தன்

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# மொனேகோ அப்படியே சாப்பிட அருமை— மகுடம் வைத்துச் சாப்பிட மஜா




**வெண்ணெய் வாகினி**
வெண்ணெய்ப் பரவல்
மீது இறால் வறுவல்

**பட்டாணிப்ரியா**
தக்காளிக் கெச்சப் மீது
பச்சைநிறப் பட்டாணி

**முட்டை மோகனு**
வேகவைத்த முட்டைச்
சீவல்களின் படலம்

**சீஸ் உல்லாஸ்**
சீஸ் துண்டுகளுக்கு நடுவே
பச்சை நிறப் பட்டாணி

**ஈரல்தாரி**
சீஸ் துருவல்களின் மீது
ஈரல் துண்டங்கள்

**மசாலாட்சி**
சட்னி விழுதுக்கு மேல்
வெங்காய ஸ்லைஸ்கள்

## பார்லே மொனேகோ

இந்தியாவின் உச்ச விற்பனை
உடைய உப்பு பிஸ்கட்.

everest/814/PP-tm